# ஸ்வா ராஜ்ய சித்தி.





காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்,
திருப் பூவண மடம்.

உ

ஓம் தத் சத்
பரப்பிரஹ்மணே நம:.

சம்ஸ்கிருதத்தில்
ஸ்ரீ ஆநந்த போதேந்திர சரஸ்வதி ஸ்வாமிக ளவர்கள்
திருவாய் மலர்ந்தருளிய

# ஸ்வாராஜ்ய சித்தி.

இது
கோவிலூர் மடாலயம்
ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிக ளவர்கள்
பாத சேகரரும், உபய பாஷா வேதாந்தப்
பிரவர்த்தகாசாரியரும், பரசமய கோளரியாரும் ஆகிய
ஸ்ரீ காசிகாநந்த ஸ்வாமிக ளவர்களால்
மொழி பெயர்க்கப்பட்டு

மங்கலம் - ஷண்முக முதலியாரால்

சென்னை,
கோமளேசுவரன் பேட்டை,
சச்சிதாநந்த அச்சியந்திர சாலையில்,
பதிப்பிக்கப்பட்டது.

1919.



விலை அணா எட்டு.





# முகவுரை

உலகத்திலுள்ள எல்லாச் சீவர்களாலும் விரும்பப் படுவன வற்றுள் மோக்ஷம் ஒன்றே உயர்வுடையதாம். அதற்குச் சாதநம் பிரஹ்ம ஞாநமாம். அதனை உண்டாக்குவது அத்தியாத்ம சாஸ்திரமாம். அவ்வத்தியாத்ம சாஸ்திரங்கள் விரிந்தும் சுருங்கியும் பல விருக்கின்றன. அவற்றுள் இச் சுவா ராஜ்ய சித்தியு மொன்றும்.

இது ஸ்ரீ ஆநந்த போதேந்திர சரஸ்வதி சுவாமிக ளவர்களால் மூன்று பிரகரணரூபமாக 163 - சுலோகத்தில் அதி கம்பீரமுடைய சாஸ்திரார்த்த ரூபமாக எழுதப்பட்டது. ஷை சுவாமிகள் எழுதிய வாசிட்டத்தின், வாசிட்ட மஹா ராமாயண தாத்பரியப் பிரசார மென்னும் உரையில், உற்பத்திப் பிரகரணத்தில், 21 - வது சர்க்கத்தில், 23 - வது சுலோகத்தில், இதன் இரண்டாவது பிரகரணத்தில் 11-வது சுலோகத்தினைப் பிரமாணமாகக் காண்பித்துத் தாம் எழுதியதாக அறிவித் திருக்கின்றார்கள்.

சம்ஸ்கிருதத்திலுள்ள இஷ்ட சித்தி, நைஷ் கர்மிய சித்தி, அத்வைதப் பிரஹ்ம சித்தி, அத்வைத சித்தி என்னும் நான்கிற்கும் பிற்பட்டுச் செய்தது இந்தச் சுவா ராஜ்ய சித்தியாம்.

இது தமிழில் வாராதது கருதி நைஷ்கர்மிய சித்தி முதலியவற்றை மொழி பெயர்த் துதவிய ஸ்ரீ காசிகா

நந்த ஸ்வாமிகளவர்களால் செந்தமிழில் வசந நடையில் மொழி பெயர்க்கப்பட்டது. அத்வைதப் பிரஹ்ம சித்தி, அத்வைத சித்தி முதலியவற்றையும் மொழி பெயர்த்து வருகின்றார்கள். அவையும் சிக்கிரம் வெளி வரும்.

1-4-1919. ம. ச.



உ

சிவமயம்.

ஸ்ரீ வீரசேகரஞாந தேசிகாய நம:

# ஸ்வாராஜ்ய சித்தி.

செய்ய வீரநற் சேகரச் செம்மருள்
அய்ய வென்மனத் தன்புட னண்மியே
துய்ய நற்சுவ ராஜ்ஜிய சித்தியை
உய்ய வேயுல குள்ளார்க் குரைப்பனால்.

## முதற் பிரகரணம்.

1. கங்கையின் பிரவாகத்தினால் அத்தியந்தஞ் சலிக்கப்பட்ட ஜடைகளினின்றும் கீழிறங்கிய பாம்பினாற் பயமுற்று அதனால் திடமாகப் பரமேஸ்வரனுடைய சரீரத்தினைக் கட்டித் தழுவிக்கொண்டு சிவனுடைய சரீரத்தில் மூழ்கி யிருக்கப்பட்ட பர்வத ராஜன் புத்திரியை மந்தஹாசத்தோடு பார்ப்பவராயும், நமஸ்காரம் முதலியவற்றால் நம்ரீபாவத்தினை அடைந்த முமுக்ஷு ஜநங்களின் சமூகத்தினை சஹஜப் பிரீதியினால் உண்டான கடாக்ஷத்தினால் ஆநந்தஞ்செய்வித்தும் இருக்கின்ற (உண்மையில்) நிரதிசயாநந்த ஸ்வரூபப் பரப்பிரஹ்ம சந்திரமௌளியாகிய சிவன், நம தஞ்ஞாநாந்தகாரத்தினை நாசஞ் செய்க.

2. ஜநந மரண பயத்தினை மீண்டுமீண்டும்ஸ்மரித்து, வைராக்கியத்திற்குக் காரணமான விஷய தோஷ தரிசந விருத்தி உண்டானவனாய், இருதயத்தில் பிரவேசித்துள்ள உமாகாந்தனாகிய பசுபதியை மீண்டு

மீண்டுந் தியாகித்து, (பின்னர்) சீக்கிரம் பரமாநந்த ரூப அமிருத தாரையை மீண்டு மீண்டுங் குடித்துக் கொண்டு, தனது குருவினது திருவடிக் கமல மிரண்டினையும் மீண்டு மீண்டும் (நான்) நமஸ்கரிக்கின்றேன்.

3. எவரிடத்தி னின்றும் ஜகத் துண்டாகின்றது, எவரிடத்தில் இருக்கின்றது, பிரளயத்தில் எந்த ரூபத்தை யடைகின்றது; எவர் சத்திய ஞாந சுக ஸ்வரூபர், தேச வஸ்து காலங்களாலாய பரிச்தேச மின்றியவர், எவர் ஜாக்கிர ஸ்வப்ந சுழுத்தி அவஸ்தைகளில் விளங்குகின்றார், ஏகர், சோக மின்றியவர், அவஸ்தாத்திரய சம்பந்த மின்றியவர், எவரது கிருபையினால் சர்வாநுகதப் பிரஹ்மம் நானா யிருக்கின்றேன், அந்தத் தேசிகேந்திரரைச் சேவிக்கின்றேன்.

4. அத்தியயந யக்ஞ தாந விரத ஜப உபாசனை இந்திரிய நிக்கிரகங்களால் நிர்மல அந்தக்கரண முடையவர்களாயும், இந்த ஜகத்து அசார மென்னும் நிச்சய முடையவர்களாயும், ராகத் துவேஷ மின்றியவர்களாயும், பிராணிகளுக்குப் பய முண்டாகாத சேஷ்டையுடையவர்களாயும், மோக்ஷ இச்சை யுடையவர்களாயுமுள்ள புருஷர்களுக்கு, கேட்டவினானே நற்சுகங் கொடுப்பதாயும், மநதிற்குச் சுகங் கொடுப்பதாயும், உபகாரஞ் செய்வதாயும் உள்ள ரகஸியமான சுருதி தாத்பரியப் பிரகரணத்தை நாம் சொல்லுகின்றோம்.

5. "தேவனை அறிந்து (அதன்பின்) சர்வ பாசங்களும் நாச முறுகின்றனர்." "(அதனை அறிந்து மிருத்தியுவைக் கடக்கின்றான்) வேறு மார்க்க மில்லை (மோக்ஷத்திற்கு)" எனபனவாதி அநேக வாக்யங்களால் ஆத்ம ஞாநத்திற்குச் சாக்ஷாத் மோக்ஷ காரணத் தன்மை



சித்திக்கில், பந்தத்திற்கு அத்தியாசத்தன்மை அர்த்த (ஸத்தப்பிரமாண)த்தினாற் சித்திக்கின்றது.

6. (லோகத்தில்) கடாதிகள், கர்மத்தினால் நாசமடைகின்றன எதனால், (அதனால்) சத்தியமாயும் பாவபதார்த்தமாயுமுள்ள ஞாநம் நாசஞ் செய்யப்படுகின்றதில்லை; (அங்ஙனமே) கர்மம்(கிரியை) மித்தியா பூதமான சுத்தி ரசதாதிகளை நாசஞ் செய்கின்றதில்லை, எதனால் அது (மித்தியா பூதமான வஸ்து) அதிஷ்டாந ஞாநத்தினால் நாச மாகின்றது (லோகத்தில் பிரசித்தம்). இவ்வாறு வஸ்து ஸ்வபாவ பேதஞ் சித்திக்கு மிடத்து, வேதாந்த வாக்கியத்தினால், ஞாநத்தினால் நாச மடைவதென்று நிச்சயிக்கப்பட்ட பந்தமானது மித்தையென்று சித்திக்கில், அதன் (பந்தத்தின்) நாசத்தின் பொருட்டு (அக்நி ஹோத்திராதி) கர்ம சமூகமானது (தனது ஸ்வபாவத்தினால்) சமர்த்த மன்று.

7. அஞ்ஞாந மூலமான இந்தப் பந்தமானது ஞாநமின்றிக் கர்மக் கூட்டங்களால் நாச மடைவ தில்லை. மாலையிற் கற்பிக்கப்பட்ட சர்ப்பமானது, நமஸ்கார மந்திர ஔஷத முதலியவற்றால் நாசத்தினை யடைகின்றதாவென்? இவ்வாறு நிச்சயஞ்செய்து, சாத்திரம் சாற்றிய மார்க்கத்தினால் கர்ம பந்தநத்தினைச், சர்ப்பமானது ஜீர்ணமான தோலை விடுவது போல் விட்டுத், தத்துவ நிஷ்டராகிய குருவினது சீர்பாதங்களை நேர் சென்றடைந்தவனாய்ச் சேவை செய்து கொண்டு ஞாந உபாயமாய சிரவண முதலியவற்றில் யத்நஞ் செய்க.

8. சிலர்(பாட்ட ஏகதேசிகளும் பிரபாகரரும்)பல இச்சை யின்றிச் செய்யப்பட்ட (நித்திய நைமித்திக) கர்மமே புகன்ற மோக்ஷ அடைவின் சாதநமாக நிச்ச

யிக்கின்றனர். அங்கியர் (பர்த்திருப் பிரபஞ்ச பாஸ்கரர் முதலியோர்) கர்மமும் பிராணுதி உபாசனேயும் சேர்ந்து முக்தியில் சாதந மென்று கூறுகின்றனர். வேறு சிலரோ ஞாநம் கர்மம் என்னும் இரண்டும் மோக்ஷத்திற் சாதந மென்று கூறுகின்றனர். (எதனுல் இந்த ஆசாரியர்கள்) தங்கள் புத்தியினுல் (வேதார்த்தத்தை) கற்பிக்கின்றனர் (அதனுல்) ஞாநத்தானே (கைவல்யம்) என்னும் வாக்கியமாகிய ஹேதுவினுல் மோக்ஷ சாதந விசாரத்தில் நாம் அந்தப் பக்ஷங்களேச் சஹசமாக அங்கீகரிப்ப தில்லே.

9. பிதிரு லோகமானது நித்திய நைமித்திக யாகாதி கர்மங்களால் அடையத்தக்கது என்று(வேதத்தால்) நிச்சயிக்கப்படுகின்றது. (அங்ஙனமே) உபாசனு கர்மத்தினுல் தேவ லோகமானது (அடையத் தக்கதென்று வேதத்தினுல் நிச்சயிக்கப்படுகின்றது). அல்லது, வித்தை, கர்மங்கட்கு (“கஷாய பக்குவம் கர்மங்கள்” என்பதாதி) ஸ்மிருதியிற் கூறப்பட்ட ராகத்துவேஷாதி சம்ஸ்கார ரூபமாக ஹிருதயத்தி லுள்ள மலத்தின் நாசமே பலமாக இந்த லோகத்தி லிருக்குக. (அல்லது) யஞ்ஞத்தினுல் என்பதாதி வாக்கியத்தினுல் ஞாந இச்சை, அல்லது ஞாநம், அல்லது நித்தியாதி கர்ம பலம் இருக்குக. (அங்ஙன மாயினும்) மோக்ஷமோ ஞாநத்தானே உண்டாம். (எதனுல்), சசகவது (முயல்) சிஹ்மப் பிள்ளேயினேப் பெறுவ தில்லே. (ஸ்வபாவம் காரணமாம்).

10. தநவான், சமர்த்தன், மூவர்ண முடையோன், பண்டிதன், (நான்) என்னு மபிமாந முடையோன் கர்மத்தில் அதிகாரி (என்று மீமாம்சா சாஸ்திரத்தில் கூறப்பட் டிருக்கின்றது. அங்ஙனமே) சாந்தன், தாந்தன் பரிவிராட், (சந்நியாசி) உபாதி யுடையோன், பிரவித்தையின் அதிகாரி (என்று வேதாந்தத்திற் கூறப்பட்டிருக்கின்றது). இவ்வாறு பேத மிருக்கு மிடத்து, ஞாநம் கர்மம் என்னு மிரண்டும் கூறிய மோக்ஷத்திற்குக் காரணமாகக்கூற இச்சிக்கும் வாதி ஆ! ஆ! தாகத்தினே நிவர்த்திக்கும் இச்சை யுடையவனுய், மிகத் தட்ப முடைய நீரும், அக்கிநியும் என்னும் இரண்டினேயும் (ஒன்முக) அருந்துக.



11. ஞாநமும், அத்துவிதீய, ஸ்வயம், சாரரூப, சுககன, சர்வபரிச்சேத சூந்ய, சிந்மாத்ரரூப சைதந்ய ஸ்வரூபப் பிரஹ்ம, ஆத்மாவினது ஏகத்துவத்தைப் போதிக்கின்றது. கூறிய ஞாநமானது, நல்ல புத்தியினே யுடைய முக்கிய அதிகாரியாகிய புருஷனுக்கு, தத்துவமசியாதி வாக்கியத்தினுல் உண்டாகின்றது. தனக்குப் பிரஹ்மத்தன்மை அறிந்திருப்பினும், தேக முதலிய வற்றில் அத்தியாச திடத்தன்மையினுல், சஹசமாகச் சம்பாதிக்கத் தக்க தன்று. அக்காரணத்தினுல், யுக்தி குரு உபதேசங்களால் உண்மை வெளியாம் வண்ணம் (நிச்சய பரியந்தம் தனக்குப் பிரஹ்மாத்மத் தன்மையை) விசாரிக்கத் தக்கது.

12. சிலர்(சார்வாகர்)தேகத்தினே ஆத்மா வென்று கூறுகின்றனர். வேறு (சார்வாகர்) இந்திரியங்களே ஆத்மா வென்கின்றனர். வேறு சிலர் பிராணன்களே ஆத்மா வென்கின்றனர்.வேறு சிலர் மநத்தினே ஆத்மா வென்கின்றனர். வேறு (வைநாசிகர்) (விருத்தி ஞாநரூப)க்ஷணிக புத்தியினே ஆத்மா வென்கின்றனர்.வேறு சிலர் (பாஸ்கரர் முதலியோர்) ஸ்திரமான புத்தியினே ஆத்மா வென்கின்றனர். சிலர் (சாங்கிய பாதஞ்சலர் முதலியோர்) சுக துக்காதி சங்க மின்றிய சித்மாத்

திரத்தினை ஆத்மா வென்கின்றனர். வேறு பாட்டர்கள் சித் ஜட ஸ்வபாவம் ஆத்மா வென்கின்றனர். வேறு பிரபாகர நையாயிகர் முதலியோர் சித்தோடுகூடிய ஞாந குண ஜடத் திரவியத்தினை ஆத்மா வென்கின்றனர். வேறு வேதாந்திகள் சத்திய ஞாந சுக அத்விதீய ரூபத்தினை ஆத்மா வென்கின்றனர். கூறிய பக்ஷத்தில் ஜிஞ்ஞாசுவிற்கு எங் நிச்சய முண்டாம்? (ஒரு நிச்சயமு முண்டாகாது).

13. சிலர் (பாசுபத பாஞ்சராத்திராதி ஆகம முணர்ந்தோர்)அந்த ஆத்மாவை அணு வென்கின்றனர். சிலர்(ஆர்ஹதந்தாதிகள்) ஆத்மா தேக பரிமாண மென் கின்றனர். வேறு நையாயிகர் முதலியோர் ஆத்மா வியாபக மென்கின்றனர். கூறிய மூன்று வாதிகளும் ஆத்மாவினை மாநசப் பிரத்தியக்ஷ விஷய மென் கின்றனர். அவர்களினும் வேறாய சாங்கியர் முதலியோர் ஆத்மாவினை நித்திய அநுமாந விஷய மென் கின்றனர். வேறு வைநாசிகர்கள் ஆத்மாவினை விருத்தி ஞாந விஷய மென்கின்றனர்., வேறு வேதாந்திகள் ஆத்மாவினைப் பஞ்சகோசங்களுக்கும் உள்ளிருக்கும் பரம ஜோதி யென்கின்றனர். இவ்வாறு மத பேதம் இருக்குமிடத்துச்,சிஞ்ஞாசுவுக்குச் சுருதி யுக்திகளால் மீண்டு மீண்டும் (சாக்ஷாத்கார பரியந்தம்) விசாரஞ் செய்தல் உசிதமாம்.

14. இவ்வாறே (ஜீவாத்மா போன்றே) சில கபில மதத்தர்கள் ஜகத்தின் உபாதான காரணம் பிரகிருதி என்கின்றனர். சில வைநாசிகரும் ஆர்ஹந்தரும் நான்கு பூதங்களின் பரமாணுக்களை ஜத்காரண மென் கின்றனர். சில பாதஞ்சல கணாத கௌதம சம்பந்திகள், ஈஸ்வரனால் பிரேரிக்கப்பட்ட பிரகிருதியையும் பரமாணுக்களையும் ஜகத்காரண மென்கின்றனர். சில விஞ்ஞாநவாதிகள், க்ஷணிக விஞ்ஞாநமே ஜகத் காரண மென்கின்றனர்.சில மாத்தியமிகர்,சூந்யம் ஜகத் காரண மென்கின்றனர். சில லோகாயதர், ஸ்வபாவம் ஜகத் காரண மென்கின்றனர். சில முஹூர்த்த வாதிகள் காலம் ஜகத் காரண மென்கின்றனர். சிலர் யதிருச்சை (அகாரனம்) ஜகத் காரண மென்கின்றனர். வேறு மீமாஞ்சகர், கர்மம் ஜகத் காரண மென்கின்றனர். வேதாந்திகள், மாயா சபளிதப் பிரஹ்மம் ஜகத் காரண மென்கின்றனர். ஆகலின்,மத பேத மிருத்தலால்,ஜகத் காரணமும் ஜிஞ்ஞாசுவால் விசாரிக்கத் தக்கதேயாம்.



15. ஜகத்தினது உத்பத்தியும், ஸ்திதியும், லயமும், எதனினின்று முண்டாகின்றனவோ, எதுமாயையினால் சாஸ்திர மொன்றா னுணரத்தக்கதும், சர்வஞ்ஞமுமோ, எது ஸ்வபாவரூபமான சுக ஸ்வரூபமும், அத்வைத ஞாந ரூபமுமோ, அந்தப் பிரஹ்மம், தனது சாக்ஷியாம். கூறிய பிரஹ்மமே வேதாந்த வாக்கியங்களினது தாத்பர்ய லக்ஷியமாம். அப்பிரஹ்மம் நிஜ ஸ்வரூபமாம். எந்தப் பிரஹ்மரூப நிஜ ஆத்மாவை அறிந்து, மஹாத்மாக்கள் ஜநந மரண சமுத்திரத்தினை இந்தச் சன்மத்தில் ஸ்வயம் தாண்டுகின்றனர்?

16. இந்தச் சகத்தினது உத்பத்தியில் சாங்கியர்களால் பிரசித்தமாகக் கூறப்பட்ட அந்தப் பிரதாநம் சமர்த்த மன்று. தார்க்கிகர்களால் கூறப்பட்ட நிமித்த காரணரூப ஈசுவரனும் கூறிய சகல காரிய உத்பத்தியில் சமர்த்த னன்று. காணாத பௌத்த க்ஷபணகர்களாற் கூறப்பட்ட அணுவும் சமர்த்த மன்று.சிலர் கூறிய சாக்ஷி யின்றிய சூநியமும் சமர்த்த மன்று. ஆகலின்,

வேதாந்திகளினுடைய இந்தச் சுருதியினுற் கூறப்பட்ட பரப்பிரஹ்மமே, சகல காரிய உத்பத்தியில் ஆதி காரணம் (என்பது) சித்தித்தது.

17. குணத்திரய சாம்யரூபப் பிரதாநம் (புருஷ போகத்தின் பொருட்டுச் சிருஷ்டியில்) பிரவர்த்தித்தற்குச் சமர்த்த மன்று; எதனுல் ஜடமாகலின் பிரதாநத்தினைப் பிரவிருத்தி ஸ்வபாவமாக அங்கீகரிக்கின், சதா சிருஷ்டியே உண்டாகவேண்டும். (ஒரு காலத்தும் பிரளய மின் றென்பது பொருளாம்). எதனுல், அதிருஷ்டமும் சிருஷ்டி பூர்வமாம் (பிரவிருத்தியாற் சிருஷ்டி யிருக்கில் உண்டாகின்றது) பூர்வம் இன்று. பந்தம் அகாரணமாம். அதன்பின், பந்த மோக்ஷங்களின் வியவஸ்தை யின்மை ஏன் உண்டாகாது? புத்திமானுகிய புருஷன், ஆநந்த மின்றிய மோக்ஷத்தையும் இச்சிப்ப தில்லை. அந்தக் காரணத்தினுல் கபில மதம் தோஷத்தோடு கூடியதாம்.

18. மற்றும், அகர்த்தாவே போக்தா வாயின், அஹோ! கிருத ஹாந அகிருதாப்யாகம மென்னும் (செய்தவினை அழிந்து செய்யாத வினை தோன்றிற் றென்னும்) தோஷ முண்டாம். அசங்கமாயும், அதிசய மின்றியதாயு முள்ள புருஷனிடத்தில் எவ்வாறுய போக முண்டாம்? புருஷ போகத்தினுல் போக்கியமாய பிரதாநத்திற்குத் தன் பிரயோஜனம் யாதுளது? அவிவேகம் எவ்வாறுயது? அவிவேகம் யாவர்க்கு? அதன்பின் அவிவேகம் போக காரணமாக எவ்வாறு உண்டாகின்றது? விவேகம் யாவர்க்கு உண்டாகின்றது? அந்த விவேகத்தினுல் யாது உண்டாகின்றது? என்று விசாரிக்கும் பிரஹ்மாவிற்கும் (கபிலமதம்) நிரூபிக்கக்கூடியதன்று.



19. (தார்க்கத்தினுனே காரணத்தினை நிரூபிக்கும்) தார்க்கிகர்களுடைய, சரீர இந்திரிய, இச்சாப் பிரயத்நம் முதலிய குண மின்றிய ஈஸ்வரன், பிரதாநத்தினைப் பிரவிர்த்தித்தற்குச் சமர்த்துடைய னலன். சரீரம், இந்திரியம் முதலியன உடைய னுவனேல், புண்ணிய பாபங்களா லுண்டாய போகம் ஈஸ்வரனுக் குண்டாகும். ஆக்கப் பிரதாநமாகச் சகத்தைச் சிருஷ்டிக்கின்ற இவனுக்கு விஷம நைஷ்கிருண்ய (நிர்த்தயைத்) தோஷங்க ளுண்டாம். (சுக துக்கங்களைக் கொடுத்தற்குக்) கர்மத்தினை இச்சிப்பவனுக அங்கிகரிக்கின், சக்கிரிகா, அநவஸ்தை, விபலம், அந்யதா சித்தி முதலியன உண்டாம்.

20. சதா எல்லாவற்றையும் விஷயஞ் செய்யும் ஞாநம், இச்சை, கிருதி யென்பவற்றோடு கூடினவன் ஈஸ்வர னுவனுயின், எல்லாக் காரியங்களும் எப்பொழுதும் உண்டாக வேண்டும். (ஜகத்தின்) உத்பத்தி ஸ்திதிப் பிரளயங்களும் ஒரே காலத்தி லுண்டாம். ஜகத் துத்பத்தியில் பாஹ்ய உபாதாந காரணம் போன்று, சரீர இந்திரிய புத்திகளி னுடைய அபேக்ஷையும் (அவனுக்கு) உண்டாம். (ஈஸ்வர சாதக) அநுமாநமும் (வியபிசார சங்கையினை நிவர்த்திக்கும்) தர்க்க மின்றியதாம். எதனுல், யத்நமும், சேஷ்டை (சரீரக் கிரியை) யினுல் காரியத்தினைச் செய்கின்றது.

21. ஹே அசத் காரிய வாதியே! (த்வி யணுக உத்பத்தியின்பொருட்டுச் சம்யோகத்திற்கு ஸ்ருஷ்டியின் ஆதியில்) பரமாணுக்கட்குக் கிரியை எக்காரணத்தா லுண்டாம்? பின்னர் நிரவயவமான அணுக்கள் எங்ஙனங் கூடும்? த்வி யணுகம், காரணமாகிய பரமாணுக்

களினின்றும் எங்ஙனம் வேறும்? பரமாணுவி லுள்ள பரிமாணத்தினால் (த்வி யணுகம்) மஹத் (பரிமாண முடையது) ஏன் ஆகாதாம்? த்வி யணுகத்தினின்று முண்டான திரி யணுக பதார்த்தமானது, மஹத் பரி மாண முடையது எங்ஙனமாம்? மற்றும் இந்தத் திரி யணுக பதார்த்தமே நித்தியமாக உங்கட் கேன் நித்தியம் ஆவ தில்லை? அணு, அல்லது, பரமாணு நித்தியமும் நிரவயவமும் எங்ஙனமாம்? கூறுக.

22. வேத விரோதியாகிய சுகதனைப் புகலப்படும் ரீதியாற் கேட்க:—சரீரத்தி னின்றும் வெளியில் உள்ள சர்வ பூத பௌதிகங்களும் க்ஷணிக மென்றும், நான்கு பூதங்களின் பரமாணுக் கூட்ட ரூபம் போக்கியம் என்றும், சரீரத்தினுள் பாஹ்யம் போன்றே, ரூப, விஞ்ஞாந, வேதநா, சம்ஞா, சம்ஸ்காரம் என்னும் பெயரினை யுடைய, சவிஷயேந்திரிய, ஹகங்காரேந்திரிய நிர்விகல்ப ஞாந, சுக துக்க ஞாந, சவிகல்ப ஞாந, ராகத் துவேஷ தர்மாதர்மாதி ரூபமான பஞ்ச ஸ்கந்தங்களையும் போக்த்ரு சமுதாயம் என்றும் கூறும் ஹே ஜடனே! ஹே கெட்ட புத்தி யுடையோனே! உனக்குப் பிரத்தியக்ஷம் முதலிய வேறு பிரமாணத்தினால் இந்த க்ஷணிகத் தன்மை முதலியன நிச்சயிக்கப்பட்டதா? அல்லது, இந்த க்ஷணிகத்தன்மை முதலிய கற்பனை உனது புத்தி வைபவமா? அல்லது, (இந்த வுனது) வியர்த்த வசநமானது மோஹத்தானா? அல்லது, ஜந வஞ்சந இச்சையாலா?

23. கிரியை யின்றிக், கிரியையின் உத்பத்தி க்ஷணத்தில் இன்றிய அணுக்கட்கு எவ்வாற்றால் சங்கியா (கூட்ட முடையதா)கும். (அணுக்களோடு) அபிந்ந



மான சங்கமானது, தேகாதிரூப பரமாணுக் கூட்டமான விஷய பதவியினை எவ்வாறு அடையும்? மற்றும் பூத பௌதிக ரூப சங்கத்தை எது விதிக்கின்றது? ஸ்கந்தங்களின் சங்கம் எந்தப் பிரகாரம் போன்று? (இந்தச் சங்கமும் வேறு கர்த்தாவை அபேக்ஷிப்பது சமாநமே.) போக் திருத்தன்மை எத்தனைக்கு? (அஹமாகார விஞ்ஞாந) தாரை யாது? போக மோக்ஷங்கள் யாவர்க் குண்டாம்? ஹே ஜடனே! கூறுக. உன்னுடைய தரிசந (சாஸ்தர)ம் எவ்வாற்றால் பல னுடையதாம்?

24. போக்திரு, போக்கியமாய இருவித சமுதாயம் அவித்தை முதலியவற்றின் பிரவிருத்திக்குக் காரணமன்று. எதனால், அவித்தை முதலியன, ஒன்றொன்றனில் நாசமாவன. நாசமாகும் பதார்த்தமானது உத்பத்தி செய்வதில் சமர்த்தமாவ தில்லை. அரே! காரியம் ஹேதுவின் சம்பந்த மின்றியதா? காரியம் ஹேது வின்றியதாயின், கரண நிஷ்பலத் தன்மை, தனது பிரதிஞ்ஞை விரோதங்களாம். அபாவத்தின்கண் மூவகைத்தாந் தன்மை எங்ஙனமாம்? கெட்ட புத்தனது விருத்தமான அநேக வாதம் பொருத்த முடைய தன்றாம்.

25. பிரத்தியக்ஷாதிப் பிரமாண சித்த பாஹ்ய கடாதி வஸ்து இன்றென்று கூறற்க. பாஹ்ய வஸ்து ஸ்வீகரிக்கப்படா விடத்து ஞாநம் நாநாப் பிரகாரமாக எது போன்று உண்டாம்? (ஸ்வப்நம் போன்று வாசனா வைசித்திரியத்தினால் ஞாந வைசித்திரிய மெனின்) ஜாக்கிர பதார்த்தங்களின் பாதமானது பார்க்கப்பட வில்லை. "பாஹ்யம்" என்னும் பதம் பிரசித்தமான எவ்வர்த்தத்தினையும் அடையாது. விஞ்ஞாந பேதங்கள் எங்ஙன

னம் அறியு மாற்ற லுடையன. மற்றும், நாநாவித வாசனை எக்காரணத்தினால் உண்டாம்? மற்றும், க்ஷணிக விஞ்ஞானத்தில் முன்னர்க் கூறிய தோஷங்கள் உண் டாம். அக்காரணத்தினால், விஞ்ஞான வாதம் நஷ்ட மா யிற்று.

26. ஓரிடத்தும் அபாவத்தி னின்றும் பாவ பதார்த்தத்தின் உத்பத்தி அறியப்பட வில்லை. ஓரேவிதமான சூந்யரூப அபாவத்தினின்றும் விசித்திர காரியம் உண் டாகாது. அந்த அபாவத்தோடு கூடிய எல்லாச் சகத் திலும் "அசத் அசத்" என்றே ஞான முண்டாம். உனக்கு அபாவப் பிரசித்தி எப்பிரமாணத்தா லுண் டாயது? (சாமாந்யாபாவ ரூப காரணம் யாண்டு மிருத்த லின்) எல்லாக் காரியங்களும் யாண்டும் ஏன் உண்டா கா? யத்நம் இன்றியே எல்லாருடைய அபீஷ்டமு முண்டாம். (ஆகலின்), ஹே ஜடனே! ஆத்மாவைக் கொல்லுகிற (தனக்கு நரகத்திற்குக் காரணமான சத் உபதேசத்)தில் நீங்கள் எங்ஙனம் பிரவிர்த்தித்தீர்கள்?

27. கடாதி ஒரு பதார்த்தம் எழுவகைத்தாக மாட்டாது. எல்லாப் பொருளும் அநைகாந்த மாகு மாயின், எழுவகைத்தாந் தன்மையு (சப்த விதத்வமு)ம் கடாதி போன்று அநைகாந்திக மாகுக. மற்றும், ஜீவன், அஜீவன் முதலிய அர்த்தங் (பொருள்)கள் எழுவகைத் தேனுவ தில்லை? (இஷ்டமாயின்), ஜகத்தும் சாஸ்திரமும் வியவஸ்தை யின்றியனவாம். விரோத மிருத்தலின், உனது சாஸ்திர நிச்சயமும் சந்தேக ரூபமே யாம். மற்றும், பந்த மோக்ஷ வியவஸ்தை யின்மை உண்டாம். ஆகலின், ஹே வஸ்திர மின்றி யவனே! சர்வம் அநைகாந்திகம் என்னும் வாதமானது



கட் குடியன் வார்த்தை போன்று அர்த்த மின்றிய தென்றும், கொள்ளத்தக்க தன் றென்றும், விளங்கு கின்றது.

28. இவ்வாறே ஹிரண்யகர்ப்ப உபாசகர் முதலி யோர்களாற்கூறப்பட்ட ஜகத் காரணமும் ஆதரித்தற்கு யோக்கிய முடைய தன்று; எதனால், சுருதிகளால் எந்தப் பிரஹ்மாவினது உத்பத்தி நிச்சயிக்கப்பட் டிருக்கின்றது. இரண்டு பரார்த்தம் அளவுடைய ஆயுள், புராணாதிகளில் நிரூபிக்கப்பட் டிருக்கின்றது. மற்றும், எதனால், வேதமானது காரியப் பிரஹ்மத் திற்கு ஞான சக்தி முதலியவற்றின் அடைவினை ஈஸ்வர னிடத்தினின்றும் அறிவிக்கின்றது. ஆகலின், சுருதி ஒன்றுனே அறியத்தக்கதாயும், அத்விதீயமாயும், மாயா சபளிதமாயு முள்ள பிரஹ்மமே (ஜகத்திற்கு) ஆதிகாரண மாதல் உசிதமாம்.

29. தமது ஜந்ம கால முதல் சிலர் துக்கியும் வேறு சிலர் சுகியுமா யிருத்தல் யாவர்க்கு எவ்வேது வால் உண்டாகின்றது? (அங்ஙனமே பால் குடித்தல் முதலியவற்றில் பாலகனுக்கு) முதற் பிரவிருத்தி எவ் வேதுவால் உண்டாகின்றது. சரீரமும் எவ்வேதுவால் உண்டாகின்றது? (அங்ஙனமே) மரித்தோன் அறிவ தில்லை. (ஸ்வபாவமே விசித்திர துக்காதி காரண மெனின்) காரண சமத்தன்மையில் ஸ்வபாவத்தன்மை சமமாகின்ற தென்பது தீபம் பீஜாங்குரம் முதலியவற் றில் பிரசித்தமாம். சுக துக்காதி வைசித்திரியமாகிய விஷமமானது கர்மத்தினாற் ஜநிக்கின்ற தென்று கூறு வாயாயின், சரீர உத்பத்திக்கு முன்னரும் ஆத்மா சித் திக்கின்றது.

30. (ஆத்மாதி நிச்சயத்தில்) மாநசப் பிரத்தி
யக்ஷ ரூப மொன்றே பிரமாண மாமாயின், உன்னால்
கூறப்பட்ட வசநம் எங்ஙனம் பிரமாணமாம்?(நீ) கூறுக.
பிரமப் பிரமாதி தோஷ முடைய புருஷ ஜந்யத் தன்மை
ரூப தோஷத்தோடு கூடிய உன்னாற் கூறப்பட்டதும்,
நிச்சயிக்கப்பட்ட அர்த்தத்தினையுடைய பிரமாணமா
மாயின், தோஷ மின்றிய வேதம் பிரமாண மன்றோ ?
(பிரமாணமேயாம்). இந்திரியங்களா னன்றிப் பிரத்தி
யக்ஷம் சித்திப்ப தில்லை. (அது) பிரத்தியக்ஷத்தின்
கண்ணே பிரமாணத் தன்மை உனக்குச் சுலப மன்று.
நீங்கள் அந்நிய புருஷனுடைய ஞாநத்தினை அறிதற்
குச் சமர்த்துடையவ ராகமாட்டீர்கள். கூறிய எல்லா
ஹேதுவாலும் (நீங்கள்) பொய் கூறும் ஸ்வபாவ
முடையோ ராவீர்கள்.

31. ஜநங்கட்கு, “ ஸ்தூலன், யௌவநன், குச
லன், நான் ” என்று சரீரத்தின்கண் ஆத்ம புத்தி ஸ்வ
பாவமாகவே சித்தித் திருக்கின்றதாகலின், இந்த ஸ்வ
பாவ சித்த தேஹாத்மத் தன்மையினை அறிவிக்கும்
உன்னுடைய தரிசநம் நிஷ்பலமாம். (உனது தரிச
நம்) வேதத் த்வேஷத்தால் பிரவிருத்தித் திருக்குமா
யின், ஆ ! ஆ ! த்வேஷ மூலமானது அத்தியந்தம்
பிரமாண மன்று. (ஆகலின்) ஹே வஞ்சனே! கெட்ட
பிராரத்தத்தால் நீ ஒருவன் விபரீத புத்தி யுடையவ
னாகப் பிறந்தாய். ஆ ! ஆ ! அந்நியர்களைக் கொல்லு
தற்கு எதன் பொருட்டுப் பிரவிருத்திக்கின்றாய் ?

32. மாதா பிதாக்களின் சுக்கில சோணிதத்தி
னால் உண்டானதாயும், ஜடமாயும், சாப்பிடுதலினாலே
விருத்தி யடைவதாயும், ஷட்பாவ விகாரமாயும், சர்



மம், அஸ்தி, ஸ்நாயு, மாம்சம், மாலை, ஆகார, மலம்,
மஜ்ஜை, ரக்த ரூபமாயும், அதி ஸ்வல்பமாயும், மாநச
சரீர வியாதிகளோடு கூடியதாயும், பிராணன் நீங்கிய
காலத்து மட்பாண்டத்திற்குச் சமாநமானதாயும்,
(பின்) மலம், புழு, சாம்பல் ரூபமாகப் பரிணமிப்பதா
யும், உள்ள அந்தத் தேகத்தினை, ஹே மூடனே !
எவ் வேதுவால் “நான்” (ஆத்மா) என்று அங்கீகரிக்
கின்றாய்? (மூடனா யிருத்தலின்) எவராலாவது வஞ்சிக்
கப்பட்டவனா யிருக்கின்றாய்.

33. இந்திரியங்கட்கு ஆத்மத் தன்மை கூறுவதில்
தேக உன்மாதப் பிரசங்கம் வரும்; ஒவ்வொரு இந்திரி
யத்திற்கும் ஆத்மத் தன்மை நிச்சயித்திருக்கும் பக்ஷத்
தில் ஸ்வாமி (ஆத்ம) நாநாத்தன்மைத் தோஷம் வருத
லின். சமுதாய (எல்லா இந்திரியங்களும் சேர்ந்து அறி
கிற) விஷயத்தில், குருடன், ஊமையன் நாசமாதல் வே
ண்டும். பார்க்கப்பட்ட, கேட்கப்பட்ட பதார்த்தங்களைச்
சொல்லுதல் பொருந்துவ தில்லை. (புகன்ற இந்திரிய)
சமுதாயமும் நிரூபிக்கப்பட வில்லை. (அங்ஙனமே ஸ்வப்
நத்தில்) ஸ்வப்ந திருஷ்டா வில்லாமற் போவன். (அங்ங
னமே மரணத்திற் போன்று சயநத்திலும்) பய முண்
டாம் ; தூங்குதலிலும், மரித்தலிலும் சமாநமாகலின்.

34. பிராணன் ஆத்மா வன்று ; ஜடமாகலின்,
அந்நத்தாற் பூசப்பட்டிருத்தலின், ஜல மய மாகலின்,
சுழுத்தியில் அதிகப் பிரவிருத்தி காணப்படுதலின்.
இந்தப் பிராணன் சஞ்சரிக்கும் காலத்தும் “ நான் அச
லன் ” என்னும் ஞாந முண்டாகின்றமையின், சரீரத்தி
னின்றும், தான் வெளிப்போதற் பொருட்டுப் பிரா
ணனை உத்பத்தி செய்ததாயும், மரண பரியந்தம்

இதன் தாரணத்தினுல் ஜீவ சப்த வாச்சியமாயும், தன தாலயமாகிய சரீரத்தினைப் பிராணனுல் ரக்ஷிப்பதாயும், ஸ்வயம் பிரகாசமாயும், (அவஸ்தாத் திரயங்களிலும்) ஏகரசமாயும் உள்ள ஆத்மா பிராண னின்றும் அந்நியமா யிருக்கின்றது.

35. மநமும் ஆத்மா வன்று என்று நிச்சயிக்கப் பட்டது; உற்பத்திக்குச் சாதந மாகலின், அந்ந விகார மாகலின், (மநம்) இருவிதமாக (சுத்தி அசுத்தியாக) விளங்குதலின், (அங்ஙனமே) பந்த மோக்ஷ காரண மாகலின், மநம் பின்னர்ச் சரீரத்தினைக் கவர்தலின், (தாதாத்மிய அத்தியாசத்தினுல் ஆத்மாவிற்கு) மநோ மயத்தன்மை கேட்கப்படுதலின், சாக்கிர ஸ்வப்ந லய மான சுழுத்தியில் கரண சமூகம் லயமாகுங் காலத்தில் மநம் லய மடைதலின், சுழுத்தியினின்றும் எழுந்து ஜாக்கிரத்தில் சுழுத்தி, ஆண் டுள்ள சுகம் என்பவற் றின் ஸ்மரணத்தினுலும் (ஆத்மா வன்றும்).

36. இந்தச் சரீரத்தில் நித்திய விஞ்ஞாநம் யாது அது மநதோடு சமமாம். மற்றும், (அது ஆத்மாவா மாயின்) நாநாத்மத்தன்மை யுண்டாம்; அந்த விஞ் ஞாநத்திற்கு அநேகாத்மத் தன்மை உளதாகலின், (விஞ்ஞாநத்தில்) தாதாத்மிய அத்தியாச காரணத்தினுல் ஆத்மாவிற்குப் பந்தம் கேட்கப்படுதலினுனும், தனது ஆத்மாவிற்குப் போக மோக்ஷத்தின் பொருட்டுச் சரீரமாகிய ரதத்தில் விஞ்ஞாநத்திற்குச் சாரதித் தன் மை,யாது கற்பிக்கப்பட்டிருக்கின்றதோ (அதுவும்புத்தி ஆத்மாவின் பேதத்திற் காரணம்) ஆகலின், இந்த விஞ் ஞாநத்திற்குச் சாக்ஷியாயும், விஞ்ஞாநத்தோடு உப



ஹித ஸ்வரூபமாயும், சிந்மயமாயும், ஆந்தரமாயும் உள்ள ஆத்மா, (விஞ்ஞாநத்தி னின்றும்) அந்நியமாக இருக்கின்றது.

37. சித்ஸ்வரூபமாய் அணு பரிமாண முடையது ஆத்மாவாயின், உன்னுடைய மதத்தில் சகல சரீரத்தி லும் சைத்திய ஞாநம் உண்டாகலாகாது. வைதர்மியம் இல்லாதிருக்கின்,சகல சரீரத்திலும் உள்ள சைத்தியம் (குளிர்ச்சி) முதலியவற்றைக் கவரும் கர்த்தாவாகிய இந்த ஆத்மாவினது போதமும், குணமும் (ஆத்மாவி னின்றும்) அந்நியமாகா. (ஆத்ம ஞாநங்களின்) வைதர் மியத்தில் அணு ஆத்மாவினது சித்ரூபமான ஞாநம் சர்வ சரீரங்களிலும் எங்ஙனம் வியாபிக்கும்? அல்லது, ஆத்மாவிற்கு அணு பரிமாணம் உனக்கு எப்பிரமா ணத்தினுற் சித்தமாயிற்று? (ரோமத்தின் நுனியில் நூறு கூறு என்பதாதி) சுருதிகளான் என்னற்க; எதனுல், அந்தச் சுருதிகள் ஆத்மாவின் அநந்தத் தன்மையில் நிஷ்டை யுடையன.

38. ஆத்மா ஒன்ருய்ச் சித் ஜடமாகிய விருத்த மான இருதன்மை ஆதல் பொருந்தாது. பின்னர், ஆத்மா தனக்குத் தானே விஷயமாகுதல் எவ்வாறும்? அந்தச் சித் அசித் ரூபங்களாய அம்சங்கள் எச் சொரூ பங்கள்? (அவற்றிற்குச்) சம்பந்தம் யாது? அவ்வாறே ஆத்மா (அம்சங்களினின்றும் பிந்நமா? அபிந்நமா?). சேதநத்திற்குச் சடத்தன்மை எதன் பொருட்டு? எக் காரணத்தால் (அங்கீகரிக்கப்படுகின்றது.)? ஆத்மாவின் கருத்திருத் தன்மை எவ்வாருயது? அல்லது, (சுருதி யில் நிஷ்கிரியத் தன்மையினுற் பிரசித்தமான) ஆத்மா கரண சமுதாயத்தினை எங்ஙனம் தரிக்கின்றது? (ஆக

வின்) அவிவேகித் தன்மையினற் பசு சமானமான கிரியையிற் பொருந்தும் மீமாம்சகர்களால் ஜீவனது யதார்த்தத்வம் நிரூபித்தற் கசக்கியமாம்.

39. ஜீவர்கட்கு விபுத்தன்மை யிருக்குமாயின், சரீரம், யத்நம், கரணம், அதிருஷ்டம், சமானமாக இருத்தலின், போக வியவஸ்தை பொருந்தாது. எந்த ஹேதுவினுல், மநமும் (மூர்த்தமாகலின்) எல்லா ஆத்மாவோடும் சாங்கரிய (சம்யோக)ம் உண்டாம். சரீரோபாதிகளினுல் வியவஸ்தையினை நீ கூறுவாயாயின், நாநா ஆத்மத்தன்மை அப் பிரமாணமாம். எதனுல், ஆத்மாவினிடத்தில் பேதம் சித்திக்கினும், சித்திக்காவிடினும் கற்பிக்கப்பட்ட விசேஷங்கள் நிஷ்பலங்களேயாம்.

40. மற்றும், அவயவ மின்றிய ஆத்மாவினிடத்து, நிரவயவமான மநதினது சம்யோகம் சம்பவமன்று. திரவியம் நிரவயவ மன்று, நித்திய மன்று. ஞாநம் அதன் தர்ம மன்று. எதனுல் (ஜட தர்மத் தன்மையில்) ஞாநமும் ஜடமாம்?

41. (மற்றும், ஹே தார்க்கினே!) ஸ்வயம் ஜடஸ்வரூபமான நீ, சுழுத்தி ஞாநம், அஞ்ஞாநம், ஆத்மா அல்லது அக் கால சுகம் என்பனவற்றை (சுழுத்தியினின்றும்) விழித்தவனுய் எங்ஙனம் ஸ்மரிப்பாய், (அங்ஙனமே) அசாக்ஷி (யாகிய) நீ "இது" "இது" என்று அநேக எண்ணிக்கையையுடைய (தாராவாஹிக) அநேக ஞாநங்களை எந்த ஞாநத்தினுல் அறிவாய்? (எதனுல்) வெகு காலம் (நான் கடத்தினை) அறிந்தேன் (என்று கூறுகின்ருய்)?

42. ஜடம் ஆத்மா வன்ருகலின், அவற்றின் வேருய், இச்சை முதலியவற்றிற்கும், உற்பத்தி நாசமாகிய பரம்பரையை உடைய இந்தியங்கட்கும், பிராணன்கட்கும், மநங்கட்கும், புத்திக்கும் சாக்ஷியாய், நாசமின்றிய ஞாந ஸ்வரூபமாய், அவஸ்தாத் திரயத்திலும் சாக்ஷியாகச் சஞ்சரிப்பதாய் ஆத்மா இருக்கின்றது.



43. சூரியன், சந்திரன், அக்நி, வாக்குக்களின் பிரகாசம் நன்கு நிவிர்த்தியாகுமிடத்து, இந்திரிய சமூகங்கள் லயமானவிடத்து, சுருதிகளாற், சங்க மின்றியதாயும், ஸ்வயம் ஜோதியாயும், வெளிப்படுத்தப்பட்டமித்தியார்த்தமாயும், சித்ரூப தாதுவாயும் அந்த ராத்மா கூறப்பட்டிருக்கின்றது.

44. எது கரணக் கூட்டத்தினுல் பாஹ்ய விஷயங்களைப் பிரகாசிக்கின்றதோ, (எது) கரணக் கூட்டத்தினை அந்தக்கரணத்தினுல் பிரகாசிக்கின்றதோ, (எது) புத்தியை ஸ்வரூப சைதந்யத்தினுல் நிரந்தரம் பிரகாசிக்கின்றதோ, (எது) வெளியிற் செல்லும் இக்கரணங்களால் அறியப்படுகின்ற தில்லையோ, (எது) சரீரமாகிய கிரகத்தின் மத்தியி லுள்ள தீபமோ, இது (அதனை) ஆத்மா வென்று அறிக.

45. எது, வீடு, தநம், புத்திரன், ஸ்திரீ முதலியவற்றினின்றும் அதிகப் பிரிய முடையதோ, எதன் (ஆத்மாவின்) பிரியத்தினுல் அந்நிய பதார்த்தங்களைப் பிரிய மென்று அங்கிகரிக்கப்படுகின்றதோ, (எது) பரார்த்தத்திற்கு முடிவிடமா யிருக்கின்றதோ, (எது) நீக்கப்பட்ட இதார்த்த முடையதோ, (எது) சுக சமுத்திரமோ, அது அந்த ராத்மா வென்று நிச்சயமாக அறிக.

46. சுத்தமாய ஆத்மா, "நான் இது" என்னும் உபாதிகளின் தர்மங்களைப் பொய்யாகவே மோஹத்தி

னால் (தன்னிடத்து) அங்கீகரிக்கின்றது.ஜலத்திற் பிரதி பிம்பித்திருக்கின்ற சூரியனிடத்தில் ஜல சம்பந்த பேத தர்மங்களாய விருத்தி முதலியவற்றை (கற்பிப்பது) போல, (தனக்கும் உபாதிக்கும்) பரஸ்பரம் (தாதாத்மியமாக) ஆரோபஞ் செய்தலின்.

47. "நான் அஞ்ஞனா யிருக்கின்றேன்" என்னும் அநுபவத்தினால் சித்தனிடத்திருந்து சித்தினை விஷயஞ் செய்யும் உற்பத்தி யின்றிய அஞ்ஞானம், சைதந்நியத்தினை மறைத்து, (அந்தச்) சைதந்நியத்தானே விளங்குகின்றது. எங்ஙனம் ராகு சந்திரனை (மறைத்துச் சந்திரனாலே விளங்குகின்றது), மீண்டும், மித்தையாக ஜகத்தினை உண்டுபண்ணிப் பிரமிக்கின்றது. ஆ! ஆ! (அந்த அஞ்ஞானம்) அநிர்வசநீயமாம்.

48. சித்தின் விளக்கத்தில் சித்தின் சாமர்த்தியம் போன்றும்,பேதத்தின் விளக்கத்தில் பேதத்தின் சாமர்த்தியம் போன்றும், அஞ்ஞானம் தனது, அந்நியத்தினது (காரிய) நிர்வாகத்தில் ஸ்வயம் சமர்த்துடையதாகின்றது. அசம்பவத்தினைச் செய்வதில் சாமர்த்தியமுடைய அம் மாயை, காரியத்தினால் நன்கு மோஹத்தினைச் செய்கின்றது.

49. அறியப்படாத வஸ்துவாகிய அஃதின்றிய தன்கண் அப் புத்தி அத்தியாச மெனப்படும். (அஃதும்) "நான் அஞ்ஞன்" "நான் துர்ப்பலன்" "நான் நரன்" "நான் தரித்திரன்" என்றும், "என் புத்திரர்கள் எங்ஙனம் ஜீவிப்பார்கள்" என்றும் பிரத்தியகாத்மாவினிடத்தில் ஸ்பஷ்டமாக அநுபவிக்கப்படுகின்றது.

50. சரீரத்தில், "நான் சுத்தன்" "நான் சுகி" "நான் ஸ்திரன்" "நான் சேதநன்" என்று ஆத்ம



தர்மங்களை அத்தியாசஞ் செய்கின்றான். (அவ்வாறே) ஆத்மாவினிடத்தில், "நான் யௌவநன்" 'நான் ஸ்தூலன்" "நான் கௌரன்" "நான் சுந்தரன்" "நான் படு" என்று தேக தர்மங்களை அத்தியாசஞ் செய்கின்றான். (இவ்வாறு) பரஸ்பர அத்தியாசமாகிய சத்திய, மித்தைகளோடு கலப்புச் சொரூபமாகிய ஜீவன், அயப் பிண்டத்திற் பிரவேசித்த அக்கினி கொல்லன் அடை கல்லை அடித்த(லாற் பிராந்தியாகத் தோற்றுத)ல் போன்று, நாநாவித சம்சார சமூக அநர்த்தத்தினை அடைகின்றான். (படு-சமர்த்தன்).

51. ஒளி, இருளொப்ப விரோத மிருப்பினும் ஞாந ஞேயங்கட்கும், ஆத்மா அநாத்மாக்கட்கும், "நான்" "எனது" என்னும் அத்தியாசம் ஸ்பஷ்டமாக (எல்லாராலும்) அநுபவிக்கப்பட் டிருக்கின்றது. ஆதலின், இந்த அத்தியாசத்தில் வித்துவான்கட்கு அசம்பாவனை இன்று. ஸ்வப்நம் முதலியவற்றில் வேறு மார்க்க மின்மையினாலும், ஆகாயத்தில் நீல நிறத் தன்மை அத்தியாசம் பார்க்கப்படுதலினாலும் என்க. (வியவகாரத்தில்) வித்துவானுக்கும் பசு முதலியவற்றிற்கும் சமானத்தன்மை யிருத்தலின் சர்வ வியவகாரமும் அத்தியாச காரணத்தானே ஆம் என்பது சித்தமாயிற்று.

52. ஜநங்கள், தர்மத்தினால் தேவத்தன்மையினை அடைகின்றனர்; பின்.பாபங்களால் நரகத்தினை அடைகின்றனர். (அதனினின்றும் எஞ்சிய பாபங்களால்) ஸ்தாவராதி சரீரங்களை அடைந்து, மரித்து, அந்தப் புண்ணிய பாபங்களினால் ஒருகால் மநுஷ்ய சரீரத்தினை அடைகின்றனர், கர்ம, உபாசனைகளால் இரண்ய கர்ப்ப

லோகத்தினை அடைகின்றனர். ஆண்டு (வைராக்ய முற்ற) சிலர் மோக்ஷத்தினை அடைகின்றனர். போகேச்சை யுடையோர் மீண்டு மீண்டும் ஜன்மத்தை (பிரஹ்ம லோகத்தினின்று மீண்டு வந்து) அடைகின்றனர். இவ்வாறு விஷமமான சம்சாரத்தில் (ஜநங்கள் மீண்டு மீண்டும்) சுழலுகின்றனர்.

53. ஸ்வர்க்கத்தினின்று கீழே விழுங்கால் துக்கம். நகரத்தில் அநேகவித துக்கம். கர்ப்ப வாசத்தில் அதிதுக்கம். பால்யத்தில் ஸ்வாதந்திரிய மின்மையினும், போஜநத்தின் பொருட்டும், பாலக் கிரகமாகிய ரோகத்தினும், அழுதலினும், துக்கமே. யௌவநத்தில் குரோதம், லோபம், வியசநம், பராஜயம், சஞ்சலத்தன்மை, தரித்திரத்தன்மை முதலியன (உண்டாகின்றமையின்) துக்கமேயாம். விருத்தாவஸ்தையில் சோக, மோக இந்திரிய நாசங்களால் துக்கமே யாம். மரணத்தில் அதிதுக்கமாம்.

54. எந்தச் சீவன், அஞ்ஞாந சம்பந்தத்தினால் கர்ம பந்த முடையோனும் சரீர ஆதீநமானவனுமாய்ப் புகன்ற கிரமமாகச் சந்ம சமூகங்களால் சுழலுகின்றனனோ, (அவ்வாறே) துக்கத்தின் முடிவை அறிவதில்லையோ, ஜந்ம சமூகத்தினை ஸ்மரிப்பதில்லையோ, அப் புருஷனை, வேதாந்த வாக்கியங்களும், சூத்திரம், பாஷ்யம் முதலியனவும் தனது ஆத்ம ராஜ்ஜியத்தில் அபிஷேகம் செய்வித்தற்குச் சர்வ அநர்த்த மூல நாச வாயிலாய்த் தாத்பரியத்தினால் பிரவிர்த்தித் திருக்கின்றன.

அத்தியாரோபப் பிரகரண மென்னும்
முதற் பிரகரணம் முற்றிற்று.

---




## இரண்டாவது பிரகரணம்.

---

1. உபாதாந நிமித்தத்தன்மை ரூப ஜகத் ஜந்மாதி காரணத் தன்மையாக, எந்த லக்ஷணம் முதற் பிரகரணத்தில் 17 வது சுலோகத்தில் கூறப்பட்டதோ, அவ் இவ் லக்ஷணம், சச்சிதாநந்த ரூபமாயும், சர்வ த்வைதங்க ளின்றியதாயும், மிக நுட்பமாயும், சத்திய ஞாநாதி என்னும் வேத மந்திரத்தினால் கூறப்பட்டதாயும், எல்லா மந வாக்குக்களையும் கடந்ததாயும், (பஞ்சகோசக்) குகையி லிருப்பதாயும், தனததிஷ்டாந ரூபமாயு முள்ள பிரஹ்மத்தினைச், சாகை சந்திரனை (அறிவிப்பது) போன்று அறிவிக்கின்றது. லக்ஷயமும் இவ்வாறேயாம்.

2. கூடஸ்தமாயிருக்கும் பிரஹ்மம் ஜகத்தினை உண்டாக்குகின்றது, மாயை யின்றி உண்டாக்குகின்றதில்லை. அம் மாயை மித்தையாம்; அதனிட (மித்தையாகிய அர்த்த) த்தில் மாயா (சப்தப்) பிரசித்தியாகலானும், பிரஹ்ம ஞாநத்தினால் அதன் நிவர்த்தி கேட்கப்படுதலினாலும் (என்க). அஃதே அவித்தையாம். பொய்ப் பொருளாயினும் (தனக் குசிதமான யுத்தாதி) காரிய சமர்த்தம் (புராணாதிகளில்) பிரசித்தமாம். மாயிகமாகலின் பிரபஞ்சம் பிரஹ்ம சைதந்யத்தின் விவர்த்தமாம்; மயிற் றோகையின் காந்தி போன்று சிந்திக்கக் கூடாததாம்.

3. எக் காரணத்தினால் ஜகத்து, சத்ரூபப் பிரஹ்மத்தினின்றும் வெளிப்பட்டிருக்கின்றதோ, பின், சத்ரூபப் பிரஹ்மத்தினாலே நிலைத்திருக்கின்றதோ, பின்,

சத்ரூபப் பிரஹ்மத்தின்கண் லயத்தினை அடைகின்றதோ, அக் காரணத்தினானே சத்ரூபமேயாம். அற்பமான கட சராவாதி காரியம் மண்ணேயாவது போல சத்தினின்றும் வேறு ஒன்றும் இருப்ப தில்லை. சத்ரூபப் பிரஹ்மத்தினின்றும் (ஜகத்) பேதமா யிருக்கின் அசத்தாம். அற்றேல் சத்ரூபப் பிரஹ்மமயம் ஜகத்தாகுமாயின், (சமாதானம்) அப்பொழுது அற்பப் பேதமு மில்லை. பேத அபேதங்கள் விரோதங்களாம். அபிந்ந வஸ்துவினிடத்தில் பேத மிருப்ப தில்லை.

4. பிந்ந மின்றிய அபிந்ந வஸ்துவில் பிரதீதியாகும் பேதம், சந்திரனிடத்துத் தோற்றும் நாநாத் தன்மை போன்று பொய்யேயாம். வெவ் வேறா யிருக்கும் பிந்ந வஸ்துவில் பிரதீதியாகும் அபேதமும் அஃதேமானப் பொய்யேயாம். (இது சேய்மைக் கண்ணதாய மரங்களினிடத்து விளக்கமாம்). ஆகலின், (அபேக்ஷையின்றிச்) சுயமாக வஸ்து பேதம் இன்றாம். தர்மங்களாற் பேதம் சித்திக்குமாயின், ஆச்சரியம்! தர்மங்கட்குத் தர்மியினின்றும் பேத முண்டாதல் வேண்டும். (அஃதுண்டாவ தில்லை; கநக கடகாதிகளின் அபேதமே பிரசித்தியா யிருத்தலின் என்க). லோகத்தில் பேதத்திலும், அபேதத்திலும் தர்ம தர்மி வியவஸ்தை நிச்சயமாகப் பார்க்கப்பட வில்லை.

5. மற்றும், எது (கநகாதிகள்) ஸ்வயமாக அபிந்நமோ, அது வேறொன் (குண்டல முதலியவற்)றால் பேத முடையதாகாது. அந்நிய பேதத்தால் அந்நியம் பேத முடையதாவ தில்லை. மற்றும், தர்மங்கள் பரஸ்பரம் பிந்நங்கள் யாங்ஙனம்? தர்மி அபிந்நமாகலின் (தர்மங்கள்) அபிந்நங்களாம். பேதம், பிந்நத்தினை ஆசிரயித்



திருப்ப தெனின், அதிகரண பேதமாம். (பேதாசிரயத்திலுள்ள பேதமாம்). நிரூபிக்கப்படும் அப் பேதத்தினானே (அதன் சித்தி) எனின், ஆத்மாசிரய தோஷமாம். இன்றாயின், அந்நியோந்யாசிரிய தோஷமாம். அல்லது, அநவஸ்தா தோஷமாம். ஆகலின், (ஆசிரயம் நிரூபிக்கப்படாமையின்), பேதமே நிரூபிக்க முடியாதாம்.

6. இப் பேதம் (யாவும்) பிந்ந தர்மிப் பிரதியோகியினை விஷயமாக வுடைய ஞாந ஜந்ய ஞாந வேத்தியமாம். (ஆகவே) தர்மியாதிகட்குப் பேத சித்தியாம். மற்றும், மீண்டும் அங்ஙனமே யென அநவஸ்தை பிராப்தமாம். பேத பதார்த்தத்தில் தர்மி முதலியவற்றின் அபேதத்தினை அங்கீகரிக்கின், ஹரே! பேத புத்தி பொய்யாம் (பேத பதார்த்தத்தில் தர்மி முதலியவற்றினைப் பிரதியோகியாக வுடைய) பேதத்தினை அங்கீகரிக்கின், முற்கூறிய ஆத்மாசிரய முதலிய தோஷங்களுண்டாம்; வேறு கதி யின்றாம். ஆகலின், பேதம் பொய்யேயாம்.

7. கூற வியலாத பேதத்தினுடைய பாவரூப சம்பந்தம் திரவியத்தினிடத்துப் பொருந்தாது. (சம்பந்தம் அபாவரூப மாயின்) அபாவரூப சம்பந்தம் (சம்பந்தியினின்றும்) வே றன்றாம்; சமமா யிருத்தலின், (அச்சம்பந்தம்) அவ்வவற்றின் (சம்பந்தி) ஸ்வரூபமுமன்று; இரண்டுங் கூடாமையின். பேதத்திற்கும், பேத ஆதாரத்திற்கும் பாவாபாவத்தினின்றும் வேறாய்ச் சம்பந்த ஸ்வரூப மிருப்ப தில்லை. அதனால், சுத்தியினிடத்து ரஜதம் போன்று சம்பந்த மின்றி யிருப்பினும் பிரதீதியாகும் பேதம் பொய்யேயாம்.

8. சம்யோகாதி சம்பந்தம் பொருந்தாமையின் பேதம் இந்திரியங்கட்குங் கோசர மாகாது. சம்பந்த மின்றிய பேதத்திற்கு வியாப்தியும் பொருந்தாது. (பேதத்தில்) சாதிருசியம் பொருந்துவது மில்லை. வாக்கிய தாத்பரியமும் இன்றாம். அநுபலப்திப் பிரமாண மில்லை. இப் பேதத்தில் மீண்டும் வேறு (அர்த்தாபத்தி முதலிய) பிரமாண மில்லை. பிரமாண அவிஷயமாயினும் சர்வ அநுபவ சித்தமாய இப் பேதம், ஸ்வப்ந நகரம், நடனது மாயையிற் றோன்றும் நகரம், போன்று நன்கு மித்தையேயாம்.

9. (புத்தியினும்)வெளியி லுள்ள பொருள் புத்தி மாத்திரத்தினால் உண்டாவ தில்லை. அவ் விருமை முதலிய பதார்த்தங்கள் உத்பத்தியாய் வேறு புருஷர்கட்கு அறியப்படுவதாம். ஒன் றொன்றே யாயின் இரண்டன்றாம். கடாதி யிரண்டு சேர்ந்தது த்வித்வ விசிஷ்டம் என்னும் ஞாநம் பொய்யேயாம். த்வித்வ முதலியவற்றிற்குச் சங்கர தோஷ முண்டாம். உனக்குப் பிராகபாவ காரணத்தினால் வியவஸ்தை உண்டாகாதாம். அபேக்ஷா புத்தியினால் நிச்சயிக்கப்படுவ தில்லை. முன்னர்க் கூறிய எல்லாத் தோஷங்களும் பிருதக்த்வரூப பேதத்தில் மெதுவாகப் பொருத்தத் தக்கதாம்.

10. வேறாக அறியப்படாமையின், காரியம் உபாதாந காரணத்தினின்றும் (ஸ்வரூபமாகப்) பிந்ந மன்று. காரியத்திற்கு அந்நியத்தன்மை அங்கீகரிக்கின், உபாதாநகாரணத்திற்கு விலக்ஷணத்தன்மை பொருந்தாது. ஸ்வீகரிக்கப்படாத சமவாயத்தால் வியவஸ்தை பொருந்தாது. (காரணம் காரியரூபம்) எனின், ஆயின், ஸ்வர்ணாதி காரியங்களில் இரு பங்கு கநமாதலின் விலை



அதிகமா மென்னும் பிரசங்கமாம். அவஸ்தையின் பேதத்தினாற் பேதமாயின், நிற்றல் ஓடல் என்னும் பேதத்தினால் நரர்கள் பேத முடையவர்க ளாவார்கள்.

11. (மண்ணிற்கு) பிண்டாவஸ்தை, கடத்வங்கள் (இரண்டென என) மநதில் (பேதமாகப்) பாவிக்கும் புருஷனுக்குக் காரண காரியபாவரூப புத்தி யுண்டாம். (இரண்டவஸ்தைகளிலும்) புருஷனுக்கு எங்ஙனம் மண் ணொன்றே வெளிப்படுகின்றதோ, (அங்ஙனம்) காரண காரிய பேதம் (தோற்றுவது) இல்லை. அவ்வாறே, மாயி, பிரபஞ்சங்கள் (இரண்டு என வேறாக) மநதில் பாவிக்கும் புருஷனுக்கு, காரிய காரண பேதம் (தோற்றும். மாயி, பிரபஞ்சங்க ளென்னு மிரண்டிலும்) ஒரு சத்ரூபத்தினைத் திடமாக அறியும் புருஷனுக்கு மாயியு (ஈசுவரனு) மில்லை, காரியமு மில்லை, (இவற்றின் பேதமு மில்லையாம்).

12. குடம் சத்து, குசூலம் சத்து, யாவும் சத்து, என்று (ஒரு ரூபமாக) யாது விளங்குகின்றதோ, மீண்டும் எது (சிருஷ்டிக்கு) முன்னர்ச் சுருதியில் நிரூபிக்கப்பட்டிருக்கின்றதோ, அந்தச் சத்திய வஸ்து, குடம், தாம்பாளம் முதலியவற்றில் மண் (விளங்குவது) போன்று, ஜகத்தினை வியாபித்து விளங்குகின்றது. ரஜ்ஜுவினிடத்துச் சர்ப்பம் போன்று சத்ரூபப் பிரஹ்மத்தில் சர்வ ஜகத்தும் கற்பிதமாம். (ஆகலின்), அதிஷ்டாந ஸ்வரூபமாகலின் பிரஹ்மமேயாம். சத்ரூபப் பிரஹ்மத்தினின்றும் வேறா யிருக்குமாயின்,இவ் வெல்லாச் சகத்தும் அசத்தாம். (வேறு மார்க்க மின்மையால்) அபேதத்தில் பிரஹ்மமேயாம்.

13. வாங்கல் கொடுத்தல் முதலியவற்றிற்கு யோக்கியமான வெள்ளி முதலியவற்றிலும், கிளிஞ்சில் வெள்ளி முதலியவற்றிலும் விளங்கும் பிரஹ்மசத்தை யொன்றேயாம். (அங்ஙனமாயினும்) முதலாவதாய யோக்கியமான வெள்ளியில் பிரஹ்ம சாக்ஷாத்கார பரியந்தம் இந்தச் சகத்துச் சத்தியம் என்னும் பிரதீதியினை உண்டாக்குகின்றது. இரண்டாவதாய கிளிஞ்சில் வெள்ளி முதலியவற்றில்(“இது ரஜதம்” என்னும்)பிரதீதி பரியந்தமே(இது சத்தியம் என்னும் பிரதீதியினை உண்டாக்குகின்றது); வஸ்திரத்திலும், ஸ்படிகத்தின் காரியமான குண்டிகை முதலியவற்றிலும் பிரதீதியாகும் * மஞ்சிஷ்ட சம்பந்தி ரக்த ரூபம் போன்று. (எங்ஙனம் உண்மையாக ரக்த ரூபம் மஞ்சிஷ்ட அவயவத்தி லிருப்பினும், வஸ்திரத்தில்) “சிவப்பு வஸ்திரம்” (என்னும் ஞானம்) மித்தை யன்று. (பின்னரோ) சத்தியமேயாம். ஸ்படிக காரியமான குண்டிகை முதலியவற்றில் “சிவப்பு வலம்” என்னும் ஞானம் மித்தையாம். இவ்வாறு (உணர்க).

14. சச்சிதாநந்தங்கட்கு ஏகத்தன்மை யிருப்பினும், அநிருத ஜட மஹாதுக்க மோஹங்கள் இன்மையால் “சத்தியம் ஞானம் அநந்தம் பிரஹ்மம்” என்னும் வாக்கியத்தினால் (போத்திய போதக ரூப) வியவகார விஷயத்தில், சத்தியத்தன்மை, ஞானத்தன்மை, ஆநந்தத்தன்மை ரூப பேதங் கற்பிக்கப்படுமிடத்தில் சுக்தியின்கண் இதம் அம்சம் போன்று கற்பிதமாகிய ஜகத் பதார்த்தத்தோடு வியாப்தமான சத்தை, சமான ரூபமாக விளங்குகின்றது. சுக்தித் தன்மை போன்று மாயையினால் மறைப்புண் டிருத்தலின், சித்துத் தன்மை, ஆநந்தத் தன்மைகள் விளங்க வில்லை.

* சிவப்புவர்ண பீஜமுடைய செடி.



15. இந்தக் கூட்டத்தில் ராஜா யார் எனக் கேட்குமிடத்து, மத முடைக் கஜத்தின்மேல், முத்து மாலை ரூபமாய்ப் பற்றுக் கோடாகவுடைய வலைமத்தியில் சந்திரன் (போன்று) வெண்மையாக விளங்கும் குடையின் கீழ் (சிறந்த வஸ்திரம் ஆபரணம் முதலியவற்றோடு) விளங்குவோன் யாவனோ அவனே (ராஜா) என்று கூறின், (கேட்டோன்) எல்லா விசேஷணங்களையும் விட்டுப் புருஷ விசேஷ ஒருவனை “இவன் ராஜா” என அப் போழ்தே அறிவன். (விசேஷணத்தோடு கூட உணரமாட்டான்). எக் காரணத்தால், (வேறு காலத்தில்) வேறு விதமாக இந்த ராஜாவைப் பார்த்து எவனை முன் பார்த்தோம் அவனே இந்த ராஜா வென அறிவன்.

16. கேட்போனது அறியவேண்டும் என்னு மிச்சை, கூறுவோனது தாத்பரியங்களின் அநுசாரமாகிய காரணத்தினால், முன்னர்க் கூறிய புருஷ விசேஷத்தினைப் போன்று லக்ஷணாவாக்கியங்கள் கூறப்பட்டிருக்கின்றன. (அங்ஙனமே) ஜகத் உத்பத்தி விஷய வேத வாக்கியங்கள், மாயை, அதன் காரியங்கள் கடந்த சித்மூர்த்தியாகிய பரப் பிரஹ்மத்தினைக் கூறுகின்றன.

17. தத்தவமசி மஹா வாக்கியத்தி லுள்ள, தத் த்வம் பதார்த்தங்கள்போன்று ஈண்டுச் சிருஷ்டி வாக்கியத்தில், அந்வய அநுபபத்தியும் இன்று; அபிந்ந பதார்த்தத்தினை அறிவிக்கும் சமாந வேற்றுமையுமின்று. ஆகலின், பதங்களில் லக்ஷணை இல்லை. அங்ஙனமாயினும், பேத சம்பந்தத்தினாற் பரஸ்பரம் கொண்டுகூட் டுடைய சர்வ சிருஷ்டி வாக்கியங்களும் அபிந்ந நிமித்த உபாதாந ரூப ஒரு காரணப்

பொருளைப் பிரதிபாதித்தலினுல் ஏக வாக்கியத் தன்மையினை அடைந்து சத்திய சித் ரூபமாயும் அத்வயமாயு முள்ள பிரஹ்மத்தினைக் கூறுகின்றன. ஏதனுல், உபக்கிரம உபசம்ஹாரம் முதலியவற்றின் அநுசாரத்தினுல் கூறிய பிரஹ்ம பரங்கள் அவ் வாச்கியங்கள். (ஆகவே வாக்கியத்தில் லக்ஷிணை சம்பவிக்கின்றது).

18. பிரத்தியக்ஷாதிப் பாஹ்யப் பிரமாணங்களால் நன்கு விருத்தி யடைந்த துவைதப் பிராந்தி விழிக்குங்கால் சீக்கிரம் அத்வைதத்தினைப் போதிப்ப தில் சாமர்த்திய மின்றி யிருக்குங்கால் சுருதி, உத்பத்திப் பிரளய ரூபப் பிரக்கிரியையை, இந்த வியவகார வஸ்துக்கள் யாவும் மித்தை யென்னும் அபிப்பிராயத்தினுற் சிருஷ்டித்தது.

19. (உபக்கிரமத்தில்) சத் சித் ஆநந்தம் பிரஹ்மம் எனக் கூறி,(உபசம்ஹாரத்தில்) ஏகம்,எல்லா லௌகீக வைதிக வாக்குகளையும்,எல்லாருடைய மநதினையும் கடந்திருக்கின்றது பிரஹ்மம் எனக் கூறி, (மத்தியில்) பஞ்சகோசக் குகை மத்தியில் இருப்பது பிரஹ்மம் என அப்பியாசத்தினுற் கூறி, கேவலம் உபநிஷத் ஒன்றுனே அறியத்தக்க தெனக் கூறி, பிரஹ்மம் சத்திய மித்தியா (மெய்யான பொய்) ரூப ஜகத்தினை உத்பத்தி செய்து, புகன்ற இரு ரூபமாக (சத்தை கொடுத்தல் வாயிலாக) வியாபித்து, ஸ்வயம் (பிரஹ்மம்) சத்தியம் என்று கூறும் சுபாவ முடைய (பிரஹ்ம வல்லியாகிய) சுருதி, ஸ்பஷ்டமாக அத்வைதத்தினைக் கூறுகின்றது.

20. பிரஹ்ம ஞாநி மோக்ஷத்தினை அடைகின்றுன். பிரஹ்மமோ சத் சித் அத்வய லக்ஷணமாம். ஞாநமோ (சாக்ஷி ரூபமாகப் புத்தியாகிய) குகையின் மத்தியிலுள்ள பிரத்தியக் காத்மாவிற்கு நிஜரூபப் பிரஹ்மப் பிராப்தியின் பொருட்டாம் எனக் கூறிச் சுருதியானது, தான் கூறிய சத்தியத் தன்மை, அத்வயத் தன்மைகளை நிரூபித்தற் பொருட்டு இந்தச் சகத் உத்பத்திப் பிரக்கிரியையைக் கூறிற்று. வேறு வழித்தாய் நிரபேக்ஷ சத்தியத் தன்மை முதலியவற்றின் சமர்த்தநம் பொருந்தாது.



21. (சிருஷ்டிக்குப்) பூர்வம் ஒரு ஆத்மாவே யிருந்தது; வேறு இல்லை. அவ் வாத்மா எல்லாச் சகத்தினையும்பார்த்து (இவ்வாறு செய்யத்தக்கதென்று மாயையினுல் அநுசந்தாநம் செய்து) இந்தச் சகத்தினைச் சிருஷ்டித்தது; (அதன் பின்) பிரத்தியக் காத்மரூப மாகச் சரீரத்திற் பிரவேசித்து மூன்று (அவஸ்தா ரூப) ஸ்வப்நத்தினைப் பார்த்தது; சரீர உபாதியினையுடைய அவ் வாத்மா, (குரு உபதேசித்த) விசாரத்தினுல் சிதாத்ம ஸ்வரூபத்தினை அறிவிக்கும் ஜாக்கிராவஸ்தையினை அடைந்து, தனது ஸ்வரூபமாகவே சர்வேச்சைகளையும் அடைந்து மரண மின்மையினை அடைந்தது (என்று கூறும் சுருதியும் பிரஹ்மத்தி னிடத்துத் தாத்பரிய முடைய தென்பது வெளிப் படையாம்).

22. பிருதிவி முதலிய மூன்று தூலம் மூர்த்தம், வாயு ஆகாய மிரண்டு சூக்ஷுமம் அமூர்த்தம் என்று சர்வஜகத்தினையும் மூர்த்த ஸ்தூல, அமூர்த்த சூக்ஷுமவிபாகத்தினுல், காண்வ, மாத்தி யந்திந சாகையாகிய சுருதியும் பிரஹ்மத்திற்கு இருவித ரூபத்தினை அத்தியாரோபஞ்செய்து அநந்தரம் ஈதன்று ஈதன்று என்று எவ்விதத்தானும் இருவித ரூபத்தினை நிஷேதித்து,

(அதிஷ்டாநமான சிந் மாத்திரத்தினை) உபதேசஞ்
செய்து அத்வயத்தினைச் சேஷ மாக்கிற்று.

23. எதன் ஞாநத்தினால் இந்தச் சர்வ ஜகத்தும்
அறியப்பட்ட தாகின்றதோ, அதனைக் கூறுதற்கு உப
நிஷத்தில், "ஹே சௌமிய! சத்தே (யிருந்தது)
என்னும் வாக்கியம் (எக்காரணத்தினால்) ஆரம்பிக்கப்
பட்டதோ, அக் காரணத்தி னாலே ஞாநத்தோடு கூடிய
தின் உத்பத்தியும், கூறிய வாக்கியத்தினாற் பிரதிஞ்ஞை
செய்த ஏகத் தன்மையின் அபிப்பிராயத்தினாலே புக
ன்ற உபநிஷத்திற் புகன்ற மட் பிண்டம் முதலிய திரு
ஷ்டாந்தங்களும், அந்தக் கிரமத் தானே (தார்ஷ்டாந்
தத்தோடு) சமந் வயத்தினை அடைகின்றன.

24. இந்தச் செகத்துச் சத் ரூபப் பிரஹ்மத்தி
னின்று முண்டா யிற்று; சத் ரூபப் பிரஹ்மத்தி லிருக்
கின்றது; சத் ரூபப் பிரஹ்மத்தி னிடத்தே லயத்தினை
அடைகின்றது. (ஆகலின்) ஸ்வயம் சத்தை யின்மை
யின் யாவும் காரண சத்தா ரூபமே. காரண சத்தையி
னின்று அந்நியம் யாவும் மித்தையே (என்று உத்தரக்
கிரந்தத்திற் கூறப்பட் டிருக்கின்றது). கற்பிதம் பிருதக்
சத் ஆக மாட்டாது; மரு பூமியி னின்றும் கானற்
ஜலம் வேறாகாது போன்று. ஆகலின், சத் வஸ்து அத்
வயமே என்பது சிருஷ்டிவாக்கியத்தின் தாத்பரியமாம்.

25. சர்வ தர்மங்களும் இன்றியதாய் அக்ஷ
ரத்தினும் சூக்ஷ்மமாய (வஸ்துவினைப்) பர வித்தையி
னால் அறியத் தக்கதென்று அதர்வணோபநிஷத் ஆரம்
பத்திற் கூறி, நிர்விகாரப் பிரஹ்மத்தி னின்றும் சர்வ
ஜகத்தும் உத்பத்தி யாகின்றது;(அது)பொய்யே(என்று
பிருதிவி முதலிய திருஷ்டாந்தங்களாற் கூறுகின்றது)



ஞேயப் பிரஹ்மமே சத்தியமாம் என்று ஸ்பஷ்டமாக
அதிஷ்டாநத் தன்மையினால் நிரூபித்துக் கேவல ஞாந
மாத்திரத்தினால் ஸ்வயம் அந்தப் பிரஹமம் அறிபவ
னாகின்றது என நித்தியம் அடைந்த பிரஹ்ம ஸ்வ
ரூபத்தினையே நான்காவது வேதம் கூறிற்று. (ஆக
லின், அத்வைத தாத்பரிய முடையதே யாம்).

26. பூத பவிஷ்ய வர்த்தமான கால முடைய
ஜகத்திற்கு, உத்கிருஷ்ட சத் ரூபமாயும், வாச்சிய
வாசக பேத மின்றிய தாயும் உள்ள காரணத்தைப் பிர
ணவ ரூபமாகக் கூறி, நான்கு பாதங்களாற் பாகஞ்
செய்து, முன் முற் பாதங்களைப் பிற் பிற் பாதங்களில்
லயஞ் செய்து, த்வைத மின்றிய தாயும், பரமாநந்த
ரூபமாயும், லக்ஷண மின்றிய தாயும் உள்ள நான்கா
வது பாதத்தைத் தன தாத்மாவினது யதார்த்த ரூப
மாக அதர்வண சுருதி கூறிற்று.

27. கூறிய வாற்றானே ஆண்டாண்டு (வேதாந்
தத்தில்) கேட்கப்பட்ட சிருஷ்டி வாக்கிய சமூகங்
களைப் பிரகரணரூப உபக்கிரமம் முதலிய விசாரத்தினா
லும் (பூர்வாசாரியர்களது) யுக்திகளாலும், வேறு
சுருதிகளாலும் சத்ரூப அத்வைதத்தோடு தாத்பரியத்
தினாற் சேர்க்குக. முற்புகன்ற தடஸ்த லக்ஷணத்தின்
சுருக்கம் இவ்வளவினதேயாம். தடஸ்த லக்ஷணத்
தின் பலத்திலோ, லக்ஷயப் பிரஹ்மத்தின் சத்தியத்
தன்மை, பரிச்சிந்நத்திரயங்கள் நிவாரணங்களாம்.

28. இந்தப் பிரஹ்மத்திற்கு, சத் சித் அத்வய
ஆநந்தரூபம் ஸ்வரூப லக்ஷணமாம். சத்திய அபரோக்ஷ
சுக பிந்ந வஸ்துவி னிடத்தில் புருஷ இச்சைக்கு
விஷயமாந்தன்மை இல்லை. ஆகலின், (பிரஹ்மத்திற்கு)

சத்திய ஞாநாதி ஸ்வரூபத்தன்மை (சுருதியிற் கூறப்பட்டிருக்கின்றது).ஏகரசத்தன்மைக்கு, கற்பித பேதத்தினுல், அவகாசத்தினை அடைந்த நிஷேதிக்க யோக்கியமான அசத்தியத்தன்மை முதலியவற்றால் நாசம் உண்டாகாது. எதனுல், அவ்வாறே நன்கு 14-வது சுலோகத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

29. அந்தப் பிரஹ்மத்திற்குச் சூக்ஷுமத்தன்மை யிருத்தலினுலும், ஆகாயத்திற்குப் பொய்யான நீலரூப ஆதாரத்தன்மையாற் சத்தியத் தன்மை இருப்பதுபோன்று, ஜகத்ரூப நிலத்தன்மையின் அதிஷ்டாநத்தன்மை யிருத்திலினுலும், வியாவிருத்தியின்மையினுலும், யாண்டும் ஆதேயத்தன்மை யின்மையினுலும், எல்லா வஸ்துவின் ஞாந ரூபமா யிருத்தலினுலும், (அநவஸ்தையின் பயத்தால்) எல்லாவற்றின் பாதத்திற்கும் பிரஹ்மம் அவதியா யிருத்தலினுலும், அசங்கத்தன்மைக்குப் பிரஹ்மத்திலுள்ள சத்தியத்தன்மையோடு விரோத மின்மையினுலும், சர்வ சம்பந்தத் தன்மையினுலும், (காலம் முதலிய எல்லாவற்றிற்கும்) ஆத்மாவா யிருத்தலினுலும், சாக்ஷித்தன்மை யிருத்தலினுலும், (சுருதியால்) வேறு திருஷ்டா நிஷேதிக்கப்படுதலினுலும், (சத்திய பத முடைய) வெளிப்படையான நூறு சுருதி வசநங்களினுலும், தத்துவ வித்துக்களின் அநுபூதியினுலும் சத்தியத்தன்மை சித்தமாம்.

30. (சுருதிகளிற் பிரஹ்மத்தின்கண்) ஆத்மத்தன்மை கூறியிருத்தலினுலும், ஈக்ஷித்ருத்தன்மை கூறியிருத்தலினுலும், எல்லாவற்றையும் வசம் செய்யும் தன்மையினுலும், உபநிஷத் தொன்றானே அறியுந்தன்மை கூறியிருத்தலினுலும்,சிருஷ்டிக்கவேண்டும்



என்னும் இச்சா விஷயக ஜநந சங்கல்ப ரூப தியாந உபதேசத்தாலும், சந்திரன் சூரியன் அக்கினி முதலியவற்றினைப் பிரகாசிக்குந்தன்மை கூறப்படுதலினுலும், நேரே அபரோக்ஷமாதலினுலும், புண்ணிய பாபகர்மங்களின் பிரேரகத்தன்மையும், திருஷ்டிருத்தன்மையுங் கூறப்பட்டிருத்தலினுலும், சர்வஞ்ஞத்தன்மை, ஞத் (அறியுந்)தன்மை முதலிய சப்தங்களினுலும், ஸ்பஷ்டமான நூறு வசநங்களினுலும் சத்ரூபப் பிரஹ்மம் சித்ஸ்வபாவமாம்.

31. ஆநந்தத்தன்மையின் அதிகத்திற்கு முடிவிடமாகலினுலும், எல்லாச் சுக லேசங்கட்கும் சமுத்திரத்தன்மை கூறும் சுருதிகளானும், முக்தர்களால் அடையப்படுந்தன்மை கூறுதலினுனும், நிரதிசய அநந்தாநந்த ரூபத்தன்மையினுலும், எல்லாவற்றிற்கும் உள்ளிருக்குந் தன்மை கூறப்படுதலினுனும், நிதி, கூடு, ஸ்திரீ சமான மெனக் கூறியிருத்தலினுனும், சுழுத்தி ஆநந்தத்தில் பிரஹ்மத்தன்மை கூறியிருத்தலினுனும், (ஆநந்தத்தினைச் செய்யும்) ரசத்தன்மை கூறியிருத்தலினுனும் அந்தப் பிரஹ்மம் சதா ஆநந்த ரூபமாம்.

32. ஈண்டு சத் சித் சுக ஏக ரஸத்தன்மை லக்ஷணம் யாது பிரஹ்மத்திற்குக் கூறப்பட்டதோ, அது ஜீவ சம்பந்தி (சர்வாந்தர சர்வ சாக்ஷி) பிரத்தியக்காத்மாவிலும் சமமாம். சர்வாவஸ்தையின் சாக்ஷியாகிய அதற்குப் பாதம்(விகாரம்)முதலியன பொருந்தாமையினுனும்,முக்கியப் பிரியத்திற் கிடமாகலினுனும்,உபாதி பேதத்தினுல் வஸ்து பேதஞ் சித்தியாமையினுனும், பிரஹ்ம அம்சத் தன்மை கூறி யிருத்தலினுனும்,

தேஹேந்திரிய திருஷ்டாவிற்குச் சொப்பிரகாசத் தன்மை யிருத்தலினனும் (என்க).

33. எதனல் (ஜாக்கிராவஸ்தையில்) பாதிக்கப் படும் ஸ்வப்ந பதார்த்தங்களோடு கூட பாதிக்கப் படுந் தன்மை (பிரத்தியகாத்மாவிற்குப்) பார்க்கப்ப டவில்லை. திருக் ரூப மான தான் பாதத்தினை அறிவதா யிருந்து கொண்டு தனது பாதத்தினை எது போன்று அறியும்? எதனல், வேறு திருக் கிருப்பதில் பிரமாண மில்லை. (திருக்குத் தன்மையினற்) சமானமான திருக்கு, வேறு திருக்கிற்கு விஷயமாதல் எதனல் பொருந்தாது. எதனல் ஆத்மா நிர்விகாரமோ, அதனல் அப்ரிச்சிந்நமாம். இந்தப் பிரத்தியக் காத்மா சத் ஸ்வரூபமாம்.

34. எதனல் பிந்ந பிந்நமான பால்யம் முதலிய அவஸ்தைகளில் "நான் நான்" என ஏக ரூபமாக விளங்குகின்றதோ, எதனல் இந்திரியங்கள் லீநமாயினும் ஸ்வரூபப் பிரகாசத்தினல் ஜாக்கிர பதார்த்தங்களைப் போன்று பிரத்தியக்ஷமாக அறிகின்றதோ, எதனல் அஹங்காரம் லயமாயினும் நாச மின்றிய சித்ரூபமோ, சுழுத்திக்கும், சுழுத்திச் சுக ஞானத்திற்கும் சாக்ஷியோ, (எதனல்) திருஷ்டாவின் திருஷ்டிக்கு லோப மின்மையில் சுருதியும் (இருக்கின்றதோ), அதனல் பிரத்தியக் காத்மா ஞாந ரூபமாம்.

35. எதனல் ஆத்மாவிற்கு அந்நியமான வஸ்து பிரியம் எனக் கூறும் உன்னை அது நாசஞ் செய்யும் என்று (சுருதி) கூறுகின்றதோ, எதனல் சுழுத்தியில் ஆநந்த சம்வித் ரூப ஈசுவரனகிய பிராஞ்ஞனேடு ஏகத்



தன்மையைச் (சுருதி) கூறுகின்றதோ, எதனல் மூன்று லோகத்திலும் தனது அநுகூல பதார்த்தங்களில் இச்சையும், தனது பிரதிகூல பதார்த்தங்களில் தியாக இச்சையாகிய துவேஷமும் பிரசித்தமோ, எதனல் எப்பொழுதும் நான் இருக்க வேண்டும் என இச்சிக்கப் படுகின்றதோ, அதனல், பிரத்தியக்காத்மா சுக ஸ்வரூபமாம்.

36. இவ்வாறு சுருதி குரு வசநங்களாலும், யுக்திகளாலும், அநுபூதியாலும் நிரந்தரம் விசாரிக்குமிடத்து, ஜீவேஸ்வர ஸ்வரூபங்கள் ஸ்வரூப லக்ஷண ஏகத்தன்மை யுடையன எனத் திடமாக நிச்சயிக்குங்கால், உபக்கிரம உபசம்மாரங்களால் நிச்சயிக்கப் பட்ட அபிப்பிராய முடைய தத்த்வமசி முதலிய மஹா வாக்கியங்கள், சீக்கிரம் தம தர்த்தத்தினை நிச்சயித்தற்குச் சமர்த்த மாகின்றன.

37. சிருஷ்டிக்குப் பூர்வம் எந்தச் சத் வஸ்து இருந்ததோ, பின் எது, அக்நி முதலியவற்றைச் சிருஷ்டித்ததோ, தான் சிருஷ்டித்ததில் பிரவேசித்து யாது ஜீவரூபமா யிருக்கின்றதோ, எது மித்தையாகச் சகல நாம ரூபங்களையும் சிருஷ்டித்ததோ, அந்தச் சத்ரூபப் பிரஹ்மம் தத் சப்தத்தினல் அறியத்தக்கதாம். நீ என்னும் பதத்தினல் சுவேத கேது வென்னும் பெயரினை யுடைய ஜீவன் கூறப்படுகின்றன். அசி பதம் நித்திய சித்தமான வாக்கியார்த்தத்தினை அறிவித்து வர்த்தமன அர்த்தத்தினைக் கூறுகின்றது.

38. (சமாந வேற்றுமையினை யுடைய) நாமங்களின் சாமாநாதிகரண்யம் (ஏகத் தன்மை) பாதம்,

அத்தியாசம், விசேஷணம், ஐக்கியம் என நான்கு வகைத்தாக அங்கீகாரமாம். (அவற்றுள்) முதலது பொருந்தாது; சுருதியின் முயற்சி வியர்த்தமாம். தியாநம் முதலியன கேட்கப்படாமையானும், அநித்திய பலத்தன்மைத் தோஷத்தினாலும், அத்தியாச புத்தி பொருந்தாது. விருத்த பதார்த்தங்கட்கு விசேஷண, விசேஷிய பாவம் பொருந்தாது. ஆகலின், வலுவால் வஸ்துவின் ஏகத் தன்மைப் பக்ஷமே நிலைத்தலாம்.

39. வாக்கியத்தில் (தத் த்வம் பதங்கட்கு) வாச்சியார்த்தம் பரஸ்பரம் அந்வய முடையதாகாது; எதனால் விருத்த தர்மத்தோடுகூடிய வஸ்து இரண்டு அபேதத்தினை அடையமாட்டாது, மோக்ஷ உபயோக மின்மையினாலும், மூலம் பொருந்தாமையானும், லக்ஷணையும் பரஸ்பரம் கூடிய பொருளில் பொருந்தாது.

40. (கங்கையிற் கோஷம் என்னும் வாக்கியத்தில்) மூன்றாவது பதார்த்தம் கரை போன்று, மகா வாக்கியத்தில் அந்நுவய யோக்கியமாய் வாச்சிய சம்பந்தி மூன்றாவது பதார்த்தம் பிரசித்தமா யில்லை. இரு பதங்களில், ஒரு பதத்தில் லக்ஷணையினை நிச்சயிப்பதில் லிங்கம் இல்லை; பொருந்துவது மில்லை.

41. ஜீவனுக்கு, ஈஸ்வர சதிருசம் (பிரசித்த ரூபத்தினின்றும்) வேறு நிஜ ரூபம் பிரமாணத்தினாற் சித்திப்ப தில்லை. மேல் உண்டாம் பதார்த்தத்திற்கு இருப்புத் தன்மை யில்லை. கேட்டவற்றை விடுதலும், கேளாதவற்றைக் கற்பித்தலும் உசித மில்லை. ஆகலின், தத் த்வம் பதங்கட்குப் பாக (த் தியாக) லக்ஷணையே உசிதமாம்.



42. சோயம் (தேவதத்தன்) என்னும் வாக்கியம் போன்று, தத் த்வம் பதார்த்தங்களில் விரோதியான சர்வஞ்ஞத் தன்மை கிஞ்சிஞ்ஞத் தன்மைத் தர்மங்களை நிவர்த்தித்து, சரீர புத்திகளுக்குச் சாக்ஷி (யாகிய சிந்மாத்திர பாகத்தினை த்வம் பதத்தினால்) உபலக்ஷித்து, சத் அநந்த சித் மூர்த்தி (பாகத்தினைத் தத் பதத்தினால்) உபலக்ஷித்துப் பின் (லக்ஷிக்கப்பட்ட) அகண்டார்த்த விஷயத்தில் வாக்கிய ரூப இருபதங்களையும் பொருத்துக.

43. தத்வ பத லக்ஷியத்தில் (சுரோதாவிற் குண்டாய) பரோக்ஷத் தன்மை, அடையாத் தன்மைப் புத்திகளை நிவர்த்தித்தற்கு (த்வம் பதத்தை அபேக்ஷிக்கின்றது). த்வம் பத லக்ஷியத்தில் (பிரதீதியாம்) அபூர்ணத்தன்மை, துக்கித் தன்மை ரூபப் பிராந்திகளை நிவர்த்தித்தற்கு (தத் பதத்தினை அபேக்ஷிக்கின்றது. பரஸ்பர லக்ஷிய அபேத வாயிலாகக் கூறிய பலத்தின் பொருட்டும்) அலௌகிக நிஜ ஆத்ம ஸ்வரூபத்தினைக் கூறுதற்கும் (தத் த்வம்) பதங்கள் பரஸ்பரம் அபேக்ஷை யுடையனவே.

44. ஈண்டுப் பதங்கட்கு அகண்டார்த்தத் தன்மை, வேறு சம்பந்தம் இன்றிய நித்தியத் தன்மையாம். அல்லது, ஜாதி குணாதி அந்நிய வஸ்து சம்பந்த மின்மையாம். எதனால், கூறிய அகண்டார்த்தத் தன்மை "மிகுந்த பிரகாசன் சந்திரன்" என்னும் வாக்கியத்திற் பிரசித்தமாம்; (எதனாலெனில், கேட்போனது இச்சையின், கூறுவோனது தாத்பரியத்தின் அநுபவத்தினால்) சந்திரன் மாத்திரத்தினைப் போதித்தலின்.

45. மிருதி, பிரகாசத் தன்மை, சந்திரத்தன்மைகளின் சம்பந்தம், சம்பந்த மின்மை, பேதம் முதலியன வினவப்பட வில்லை. வினவப் படாத பொருளில் சாப்த போத முண்டாவ தில்லை. ஆகலின், (கூறிய) வாக்கியத்தினுற் சந்திரன் மாத்திரம் போதமாம்.

46. எந்தப் பரமாத்மா சிருஷ்டியின் முதலில் புவனத்தினைச் சிருஷ்டித்துச் சர்வ சரீரங்களிலும் பிரவேசித்தது. எந்தப் பரமாத்மா பஞ்சபூதம், தேவ, மநுஷ்ய பசுவாதி ரூபமாம். எந்தப் பிரத்தியக் சைதந்ய நிமித்த மாத்திரத்தினுல் (இந்திரிய அந்தக்கரணங்களால்) தரிசந வசந அபிமாநங்க ளாகின்றன. ஸ்வரூப ஞாந மாத்திரத்தினை ஐஸ்வரியமாகவுடைய நான் பரமாத்மாவோடு அபிந்நமே.

47. எந்தப் பிரஹ்மம் தமப்பிரதாந மாயையினுல் நாநாவித ஆகாரமாக, ஜகத்தா யிருக்கின்றதோ, எந்தப் பிரஹ்மம் சர்வாத்மகமா யிருந்தும், நகநுனிவரைப் பிரவேசித்த சரீர முடையதா யிருந்தும் (அஞ்ஞாநத்தினுல்) பரிச்சிந்நமா யிருக்கின்றது; (ஆகலின்) அந்தப் பரப் பிரஹ்மமே மிகுந்த பிரியத்திற் கிடமான பிரத்தியக்காத்ம ரூபமாம். (இதனுல்) உண்மையாக அகம் பிரஹ்மாஸ்மி (என்னும் வாக்கியம்) பிரஹ்மத்தினையே அறிவிக்கின்றது. (எதனுல்) பிரஹ்மமே எல்லாமாம்.

48. புருஷனிடத்தில், பஞ்ச கோசக் குகை மத்தியில், எவ்விவ் வாத்மா (சாக்ஷி ரூபத்தினுல்) பிரகாசிக்கின்றதோ, சூரிய மண்டலத்தில் எந்த அநந்தாநந்த கனமான பரமாத்மா பிரகாசிக்கின்றதோ, அது ஏகம் என்று ஸ்பஷ்டமாக ஐக்கியத்தினை ஓரிடத்தில் (தைத்திரீயம்) கூறுகின்றது. ஏகாத்ம சாக்ஷாத்காரத்தினுல் ஆத்மாவின் கண்ணே ஜகத்திற்கு லயத்தினையும் கூறுகின்றது.



49. (ஹே! சுவேத கேதுவே! சிருஷ்டிக்குப் பூர்வம்) நீ சத்தாக விருந்தாய், அதன்பின் பொய்யாகத் தேஜஸ் முதலிய பூதங்களை உத்பத்திசெய்து, அதன் ரூபமான சரீராதிகளைத் தனது ரூபமாக அபிமாநித்துச் சீவனுய் ஆயிற்று. (ஆகலின்) தேகபரியந்தமான காரிய சமூகங்களை (மித்தையாத் தன்மையினுல்) திரஸ்காரஞ்செய்து, பரமார்த்த நிஜ ஸ்வரூபத்தினை நோக்கி, சிதாநந்த அத்வயமாக எந்தச் சத்ரூபப் பிரஹ்ம மிருக்கின்றதோ, அது நீயா யிருக்கின்றுய் (என்பது முதல் உபதேசமாம்).

50. ஜநங்கள் (பிரதிதினம்) சுழுத்தியில், வண்டுகள் நாநா ரசங்களை அநுபவிப்பது போல சத்ரூபத்தில் நன்கு அடைந்து, சத்ரூப சுக பாவத்தினுல் ஐக்கியத்தினை அடைந்தும் (தனது சுகத்தன்மையினை) அறிய வில்லை. மீண்டும், எந்தச் சத்ரூபப் பிரஹ்மத்தினின்றும் நழுவி, அசத் ரூபத்தினை அநுசந்தாநஞ் செய்யுஞ் ஜீவர்கள் அநேக துக்க முடையோ ராகின்றனர். (ஆகலின்) அந்தச் சத்ரூபப் பிரஹ்மம் நீயா யிருக்கின்றுய். ஒரு காலத்தும் (நீ) துக்கியா யிருப்ப தில்லை (என்பது இரண்டாவது உபதேசமாம்).

51. மேகங்களால் வேறு செய்யப்பட்டு நதி முதலியவற்றின் தன்மையினை யடைந்த சமுத்திரம் எங்ஙனம் தனது சமுத்திரத் தன்மைப் புத்தியினைவிட்டு விட்டதோ, அங்ஙனமே சரீரம் முதலிய உபாதிக

ளால் தனது நிஜ சத்ரூபத்தினை நீ ஸ்மரிப்ப தில்லை. (ஆகலின்) அந்தச் சத்ரூபப் பிரஹ்மம் நீயா யிருக்கின் றாய் எனத் தனது பரிபூரண பாவத்தினை (ஹே ஶ்வேத கேதுவே நீ) நன்கு நினைப்பாயாக (என்பது மூன்றாவது உபதேசமாம்).

52. சரீரத்தினின்றும் ஆத்மா அந்நியமா யிருக் கின்றது; ஜீவன் இன்றிய மரம் காய்தற் குறியால் அவ்வாத்மா நித்தியமும்,ஏகமுமாம். பொய்யாக இரண் டாவதாகிய சர்வ ஜகத்தும் இவ்வாத்மாவே (என நீ) அறிதி. (ஆகலின்) அந்தச் சத்ரூபப் பிரஹ்மம் நீயா யிருக்கின்றாய். (அதனால் நீ) பேதப் பிராந்தியினை விடுக (என்பது நான்காவது உபதேசமாம்).

53. உந்நதமாய் ஸ்தூலமாய் உள்ள ஆலவிரு க்ஷம் பீஜம் வரை முன்(அத்தியந்த சூக்ஷ்மமான ஆல விதையின் உள்ளிருந்து பின் வெளிப்படுவது) போ ன்று, (சிருஷ்டிக்குப் பூர்வம்) இந்தச் சகத்து எத னிடத்து இருந்து (மீண்டு) வெளிப்பட்டிருக்கின்ற தோ, அந்த, சிரத்தை யுடையோரால் உணரத்தக்க தாய் சூக்ஷ்மத்தினின்றும் மிகச் சூக்ஷ்மமாய் உள்ள, சத்ரூபப் பிரஹ்மம் நீயா யிருக்கின்றாய் (என் பது) சத்தியம். அந்நியம் (யாவும்) அசத்தியமாம் (என்பது ஐந்தாவது உபதேசமாம்).

54. எங்ஙனம் (தரிசந யோக்கியமாயினும்) ஜலத் தில் நெகிழ்ச்சித் தன்மையினை அடைந்து ஒன்றுபட்ட உப்புக் கட்டியை நேத்திரத்தினால் அறிய வில்லையோ, அங்ஙனமே இருதயத்தில் சாக்ஷி ஸ்வப்பிரகாசத் தன் மையினால் விளங்கினும், எது கரணங்களால் அறியப் படவில்லையோ, எங்ஙனம் ஜலத்திலுள்ள உப்பு நாவி



னால் அறியப்படுகின்றதோ, அது போன்று குருவின் உபதேசத்தினால் எது அறியப்படுகின்றதோ, அந்தச் சத்ரூபப் பிரஹ்மம் நீயா யிருக்கின்றாய். இந்தத் திரு சியம் நீ யல்லை (என்பது ஆறாவது உபதேசமாம்).

55. திருடர்களால் கண் கட்டப்பட்டு, (தனதுதே சத்தினின்றும் தூரத்திற்கொண்டுவந்து ஆபரணங்களை எடுத்துக் கொண்டு) ஜநங்க ளின்றிய வநத்தில் விடப் பட்ட புருஷனைப் போன்று, ராகாதி(களாகிய திருடர்) களால் நித்தியத்தன்மை நிர்மலத்தன்மை யின்றியவ னாய்ச் சரீரமாகிய வநங்களில் விடப்பட்டவனா யிருக் கின்றாய். வழிச்சென்றோன் அவனைக் கண்கட்டினின் றும் விலக்கி யாங்கு, குருவினால் பந்தம் விலக்கப்பட்ட வனா யிருக்கின்றாய்; (அதனால்) அந்தச் சத்ரூபப் பிர ஹ்மமே நீயா யிருக்கின்றாய். (ஆகலின்) அபரிச்சிந்ந ஆநந்தமாய தனது ஸ்வரூபத்தினை அடைவாய் (என் பது ஏழாவது உபதேசமாம்).

56. மூடன் இந்திரியங்களின் லயக்கிரமத்தி னால் எதனிடத்தில் அடைந்து மரிக்கின்றான். மீண்டும் ஜந்மத்தினையும் அதன் நிமித்தமான கர்ம பந்தத்தினை யும் அடைகின்றான். ஆத்ம ஞாநிகளோ (மூடனைப் போல் எதனிடத்தில் அடைந்து) யமனை வஞ்சிக்கின்ற னர்; (எதனால் முன்னமே) அஞ்ஞாநம் நீங்கி யிருக்கின் றது, அந்தச் சத்ரூபப் பிரஹ்மம் நீயா யிருக்கின்றாய். மிருத்தியுரூப பந்தத்தினைத் தாண்டுக (என்பது எட் டாவது உபதேசமாம்).

57. திருடன், ஒழுகக் காச்சிய கோடாரியால் தாக த்தினையும், (சிறைரூப) பந்தத்தினையும் அடைகின்றது போல,பொய்ச் சிந்தனையுடைய, மூட புத்தியினை யுடை

யோனும் (பீடாரூப தாகத்தினையும் மீண்டும், ஜநித்தல் முதலிய பந்தத்தினையும் அடைகின்றான்). உண்மைச் சிந்தனை யுடையோன் தாகத்தினையும், பந்தத்தினையும் அடைவ தில்லை. அதுபோல எந்தச் சத்ரூபப் பிரஹ்ம ஞாநி (ஆத்மாவில் ஆத்மாநுசந்தாந முடையவனாதலின் தாகத்தினையும், பந்தத்தினையும் அடைவ தில்லை). அந்தச் சத்ரூபப் பிரஹ்மம் நீயா யிருக்கின்றாய். பந்தப் பிராந்தியினைத் தூரத்தே தூரத்துக (என்பது ஒன்பதாவது உபதேசமாம்).

58. கூறியவாறு நல்லுரையால் பிதாவா லறிவிக்கப்பட்ட புத்திரன் (சுவேத கேது) சத்திய அத்விதீய சுக போத ஸ்பாவமான தனது ஆத்மாவை நேரே உணர்ந்தான். (இவ்வாறு) அந்நியனும் கூறிய சகல உபநிஷத் தாத்பரியத்தினை விசாரித்து, அத்விதீய சித் ஸ்வரூபத்தினை உணர்ந்தவனாய், ஸ்வாராஜ்ய சௌக்கியத்தினை அடைந்து,கிருத கிருத்திய னாகின்றான்.

59. (இவ்வெல்லாம் ஓம் என்னும் அக்ஷரரூபமாம் என உபக்கிரமித்து) சர்வ ஜகத்திற்கும் பிரணவத்தி னிடத்தில் அபேதத்தினைக் கற்பித்துப் (பிரணவ) பாதங்களைப் பகுத்து (ஜகத்து ரூப மூன்று பாதங்களைச் சித் பிரஹ்மரூப லக்ஷியத்தில் அரை மாத்திரைரூப துரீய பதத் தன்மையினால் நிச்சயித்துக் கிரமமாக) லயஞ் செய்து(எந்த லக்ஷிய சித் ரூப பாதம்)மிச்சமாம், அந்த ஒரு ஆத்மா "அயம் ஆத்மா ப்ரஹ்மம்" என ஸ்பஷ்டமாக, அதர்வண வாக்காகிய மாண்டூக்கிய சுருதியாற் கூறப்படுகின்றது.

60. ஏக ரசமாய், தோஷ மற்றதாய்ச், சேதநமாய், ஷட்பாவ விகார மின்றியதாய், எப்பொழுதும் விடுபட்ட



ஸ்வபாவமாய், அபாத்தியமாய், சூக்ஷ்மமாய், அத்வயமாய், நிரவயவமாய், வியாபகமாய், சுகரூபமாய், சர்வ அந்தக்கரண சாக்ஷிரூப்மாய், உள்ள, பிரஹ்மம் நானா யிருக்கின்றேன். (ஆகலின்) ஸ்வாபாவிகமான பிரகாசரூப சூரியனிடத்தில் அந்தகாரம் (இல்லாதது) போன்று, அசங்கமாயும், ஆநந்த சத் சேதந ரூபமாயுமுள்ள என்னிடத்தில் இந்தச் சகத்து இருந்ததுமில்லை இருக்கின்றது மில்லை, இருப்பது மில்லை.

61. கட்டைகளைக் கடைதலினால் (உண்டாம்) அக்நிஜ் ஜ்வாலை போன்று கூறிய வாறு விசாரிக்கப்பட்ட வாக்கியத்தினால் அப்பொழுதே உண்டான பிரஹ்மாகார விருத்தியானது, அஞ்ஞாநத்தோடுகூடச் சர்வத்வைத சமூகத்தினையும், திரணத்தினைப் போன்று தகித்துக், கைவல்யம் என்னும் பெயரினையுடைய பரம சுகரூப சநாதந ஆத்ம ஸ்வரூபத்தில், சீக்கிரம், ஜலத்தில் வியாபித் திருக்கும் சேற்றை (ஓர் இடத்திற் சேர்த்துவிட்டு அதனிடத்தில் நாசமாம்) தேற்றாங் கொட்டை ரேணுக்கள் போன்று லயத்தினை அடைகின்றது.

62. இந்த அகண்டாகார விருத்தி, அநாதி மூத் தாபஜ் ஜ்வரரூப விஷமமாகிய சம்சாரவியாதியை நன்கு நிவர்த்திக்கும் வைத்தியனும். (அங்ஙனமே இந்த அகண்டாகார விருத்தி) இந்திர சம்பத்துமாம். (அங்ஙனமே இவ்வகண்டாகார விருத்தி) அபரிச்சிந்ந பரமானந்த சமுத்திரத்தினை அடைவிப்பதுமாம். அந்த ஞாநாக்நி ஜ்வாலையில் பஸ்பமான கர்ம விதை, மீண்டும் முளையை உண்டாக்குவதற்குச் சமர்த்துடைய தாகாது. (அவ்வாறே) பலத்தோடு கூடிய இவ் விருத்தியின்

அடைவால் சர்வ சந்தேகத்தினுடைய பேதமும், ஆத்மாநாத்ம அத்தியாச ரூப சித் ஜடக் கிரந்தியின் பேதமும், அத்தியந்த நிவர்த்தியும் (சுருதியால்) கூறப்பட்டன.

அபவாதப் பிரகரணமென்னும்
இரண்டாவது பிரகரணம் முற்றிற்று.

---

## மூன்றாவது பிரகரணம்.

1. வாக்கிய ஜந்யமாயினும், அகண்டாகார விருத்தி ஞாநம், ஸ்வயம்பிரகாச நித்திய அபரோக்ஷ ஆத்ம வஸ்து விஷயமாகிய காரணத்தினால் (தனது) அபரோக்ஷத் தன்மையினை விடுவ தில்லை. (அபரோக்ஷ விஷய ஞாநம் பரோக்ஷம் என்பது பொருந்தாது). "நீ பத்தாமவன்" என்று கூறிய வாக்கியத்தினைத் திடமாகக் கேட்டுத் தனது பத்தாமவன் தன்மையினை அறிவதற்கு யத்நஞ் செய்யாதிருக்குந் தன்மை போலுமாம்.

2. ஸ்வபாவத்தினானே அபரோக்ஷ வஸ்துவாய ஆத்மா, சப்த ஜந்ய ஞாந விஷயத்தன்மை அபாரதத்தான் பரோக்ஷத் தன்மையினைப் பொருந்துவ தில்லை. (எதனால்) தீப, சூரியப் பிரகாசங்கட்குக் கடாதிவிஷயத்தில் விளக்கத்தினால் பேத மிருப்ப தில்லை (அது போலுமாம்).

3. அபரோக்ஷ விஷயமான பரோக்ஷ புத்தி பிரமாணத் தன்மையினை அடைதற்கு யோக்கிய மில்லை. குசலனாயினும் ஸ்வயமாகச் சதா விளங்கும் தனது ஆத்



மாவை, ஆத்மாவைக் குறித்து மறைத்துக் கொள்ளுவதற்குச் சமர்த் தின்றியவ னாகின்றான்.

4. இந்திரியங்களால் அபரோக்ஷத் தன்மை நியமநஞ் செய்யப்படுவ தில்லை; சுக துக்க இச்சை யத்நங்களில் (வேதாந்திகளின்) சம்மத மின்மையின்; (அங்ஙனமே) இருள் சுழுத்தி (ஸ்வப்ந) பதார்த்தங்களில் (இந்திரியத்தினால் உணருந் தன்மை) பார்க்கப்படாமையின், அபரோக்ஷ ஞாநத்திற்கு, விஷயத்தினது யோக்கியத் தன்மையும் காரணமாம்.

5. பரோக்ஷ ஞாநம், மறைப்புடைய பொருள் விஷயமாகுக மஹா வாக்கியத்தினானே பிரஹ்ம அஞ்ஞாநம் நிவிருத்தியாயிற்று (என்று தத்துவஞ்ஞர்களால்) அநுபவிக்கப்படுகின்றது. (அங்ஙனமே சாந்தோக்கிய) சுருதியும் (எது பூமா அது சுகம் என்று) உபதேசம் மாத்திரம் புகன்று (நாரதர் பொருட்டு அஞ்ஞாநத்தின்) கரையினை அறிவிக்கின்றார், (பகவான் சநத் குமாரர், என்பதனையும் தானே) கூறுகின்றது.

6. எதனால் ("அரே ஆத்மா பார்க்கத்தக்கது" என்னும் பிருஹ்தாரண்ய சுருதி) பரமாத்ம சாக்ஷாத்காரத்தின் பொருட்டு விசாரிக்கப்பட்ட வேதாந்தத்தினை விஷயமாகவுடைய சிரவணம் விதிக்கின்றது. எதனால் உபதேச மாத்திரத்தினால் அஞ்ஞாநம் நாசமான சிஷ்யர்கள் (நீ) பிதாவா யிருக்கின்றாய் கரையை எங்களை அடைவிப்பாய் என்று (பிப்பலாத குருவைக் குறித்துக்) கூறினார்கள். (இக் கதை பிரஶ்ந உபநிஷத்தில் இருக்கின்றது).

7. ஸ்வபாவமாகவே ஸ்வப்பிரகாச சைதந்நியத்திற்கு அபரோக்ஷத்தன்மை ஏனையவற்றின் அபேக்ஷை

யின்றிய முக்கியமாம். ஆவரண மின்றிய சாக்ஷி சேதநத்தில் தாதாத்மியத்தினுல் அத்தியஸ்தமான தனது இந்திரிய சேதந விஷய ஞாதுரு ஞாந ஞேயங்களில் உள்ள அபரோக்ஷத் தன்மை கௌணமாம். பாஹ்ய விஷயத்தில் சைதந்யத்தின் சம்பந்த முண்டாக்குவதற்கு இந்திரியத்தினின்றும் உண்டான விருத்தி உசிதமாம். மஹா வாக்கியத்தினின்றும் உண்டான அகண்டாகார விருத்தியோ, சித் சம்பந்தமான அஞ்ஞாநத்தினை மாத்திரம் நாசஞ் செய்கின்றது. விளக்கமோ ஏனையவற்றை அபேக்ஷிப்ப தில்லை.

8. கடாதி விஷய அஞ்ஞாந நாசத்தின் பொருட்டு, அல்லது சைதந்நியத்திற்குக் கடாதி சம்பந்தத்தினை உண்டாக்குதற்கு, அந்தக்கரணம் கடாதி விஷயாகாரத்தினை அடைதற்காகச், சரீரத்தின் வெளியில் விஷய இந்திரியங்களின் சம்பந்த ரூப மார்க்கம் விரும்பப் படுகின்றது.

9. எது சக்ஷு முதலியவற்ருல் அறிதற் கசக்கியமோ, சக்ஷு முதலியன எந்தப் பரமாத்மாவினுல் ஒவ்வொரு விஷயத்தில் நன்கு பிரகாசிக்கப்பட்ட பதார்த்த முடையன வாகின்றனவோ, எது வாக்காதிகளால் கோசரிக்கப்படுவ தில்லையோ, எதனுல் வாக்காதிகள் பிரவர்த்திக்கின்றனவோ, எதனுல் பிராணன் (வியாபாரத்தில்) பிரவிர்த்திக்கின்றதோ, எந்தச் சைதந்நியத்தினுல் சரீரம் இந்திரியம் மநம் புத்தி முதலியன பிரகாசிக்கின்றனவோ, அது, சுத்தமாய், ஸ்வப்பிரகாசமாய், அத்வயமாய், அபயமாய், சச்சிதாநந்த ஸ்வரூபமாயுள்ள ஆத்மாவாம்.



10. கூறியவாற்ருல் நன்கு போதிக்கப்பட்டும், (சம்சயம் முதலியவற்ருல்) ஆத்ம தத்துவத்தில் நிச்சயமில்லாத புத்தியினுல், எவனுக்கு ஆத்ம ஞாநம் சித்திக்க வில்லையோ, அவன் வித்துவான்களின் சகாயத்தினுலாவது, அல்லது, தானுகவாவது, மீண்டு மீண்டும் விசாரத்தினை அப்பியாசஞ் செய்க. (ராகாதிகளோடு கூடினவனே) சஞ்சல நிவர்த்தியின் பொருட்டு இந்திரியங்களையும், மநத்தினையும், இச்சித்தவற்றைச் சம்பாதித்தலினுலாவது, அல்லது அடக்கினுலாவது, அவ்வவற்றின் விஷயத்திற் செல்ல வொட்டாது நிவர்த்தித்து, சுத்தமான இடத்தில், ஏகமாயும், அநந்தமாயும், பரம சுக சித் ரூபமாயும் உள்ள ஆத்மாவைத் தியாநிக்குக.

11. (தியாந விரோதியான) சங்கத்தினை விட்டு, பொறுமை யுடையோனுய், பவித்திர உபகாரஞ் செய்யுஞ் சாஸ்திரத்திற் கூறிய பிரமாணத்தோடு கூடிய வஸ்துவினைப் புஜிப்போனுய், யோக சாஸ்திரார்த்த விசார ஸ்வபாவ முடையோனுய், தோஷம் இன்றிய புண்ணிய தேசத்தில், யம நியமங்களால் திடனுய், ஸ்வாசநத்தி விருப்போனுய், பிரசன்னனுய் (இருந்து கொண்டு சாஸ்திரத்திற் கூறிய) பிராணுயாமக் கிரமத்தினுல் (விஷயங்களி னின்றும்) இழுத்துச் சுபாவமாகச் சலந முடைய மநதை (முதலில்) தூல (யான மூர்த்தி) முதலியவற்றிலும், (பின்) சூக்ஷும(மான ஆத்மாவிட)த்திலும் கட்டி, (அதனையே) தியாநஞ் செய்து, ஏகாத்ம சுகத்தில் ஸ்திரமான ஏகத் தன்மை மந முடையோனுய், அஞ்ஞாந பந்தத்தினை நாசஞ் செய்கின்ருன்.

12. மஹா வாக்கியத்தினுலாவது, யோகத்தினு லாவது,எல்லே யற்ற மிகுந்த ஆநந்த ஞாந ரூப பரமாத் மாவின் சாக்ஷாத்காரம் உண்டாமிடத்து, சதா நிட சமாதி யுடையோ னுகுக. அல்லது, லோகத்தி லுள்ள வரைச் சிக்ஷிக்க வேண்டு மென்னும் அபிப்பிராய முடையவனுய் விஷயங்களைப் பூஜிக்குக; (எவ்வாற் ருனும்) மீண்டும் பந்தத்தினே அடையான்.

13. பூமியின் பரமாணுவினும் அதிக எண் ணிக்கையினே யுடைய ஹிரண்ய கர்ப்பர்கள்,நாச மடை யினும் அடைய முடியாதாகலின், துக்க மின்றிய ஆந ந்த சமுத்திர ரூப தனது ஆத்ம லாபத்தி னின்றும் உத்தமமான வேறு லாப மில்லே.

14. அஞ்ஞானத்தினுல் அடையப்படாததா யிரு ந்த தன தாத்மாவினது முன்னர்க் கூறிய லாபம்,கண்ட சாமீகர நியாயத்தினுல் ஞாந மாத்திரமாம். எக்கார ணத்தினுல் சுருதி (ஆத்மா வென்று உபாசிக்குக என) ஞாநத்தினேயே முதலிற் கொண்டு, மீண்டு மீண்டு (இதனுல் இவ்வெல்லா வற்றினேயும் அறிக; எங்ஙனம் பசுவின்) பதத்தினுல் அறிக என்று கூறுகின்றது.

15. பாதிக்கப்பட்டது அசத்தாம்; த்வஸ்த வைதர்மியத்தினுல் (நாசமான காரியம் சம்ஸ்கார ரூபத் தினுற் காரணத்திற் சத்தாகின்றது. திரோபூத பாதி தமோ அங்ஙன மன்று; ஆகலின் விஷமத்தன்மை யிருத் தலின் என்க). அஞ்ஞானத்தின் பாதமும் த்வம்ச ரூப அபாவமே. வேறு (அதிஷ்டாநத்தி னின்றும் அந்நி யம்) அன்று. அத்தியந்தாபாவம் மாத்திர ரூபமும் பாத புத்தி யன்று, (எதனுல் இது சர்ப்ப மன்று இது



ரஜ்ஜு என்பது அதிஷ்டாநத்தினேயும் கிரகிக்கின்றது) அல்லது, அபாவமும் அதிஷ்டாந ரூபமாம்; (வேறு பதார்த்த மன்று.)

16. ஞாநாக்கினியினுல், ஆரம்பிக்கப்பட்ட தேகம், அதற்கு அந்நியமான சஞ்சித கர்மம் யாவும், சீக்கிரம் பஸ்மத்தன்மை யடைகின்றன; (அங்ஙனமே) ஞாநத் தின் பின் பிராரத்த வேகத்தினு லுண்டாம் கர்மத்தி னுல், ஞாநத்தினுல் நிர்மலத் தன்மை யடைந்த தத்துவ வேத்தா, ஜலத்தினுல் தாமரை இலே போன்று பற்றப் படான்.

17. ஸ்வயம் பாதிக்கப்பட்ட ஜகத்தும், ஞாநி கட்கு, தேகம் நீங்கும் வரை (ஸ்வப்ந சம்பந்தி) திரு டன் பாதமாயினும் அதனுல் உண்டான பயம் முதலி யன போன்றும், வஸ்திரம் தகிக்கப்படினும் (சில கா லம் பிரதீதியாம்) வஸ்திராகார பஸ்மம் போன்றும், (தேகாதிகளில்) பிராரப்த போகத்திற்குச் சமர்த்த மாகின்றது.

18. ஞாநிக்கு ஜீவிக்கும் போதும் சரீரத்தில், புற்றில் விடப்பட்ட சட்டையை மீண்டு பார்க்கினும் பாம்பிற்கு (தான் என்னும் புத்தி யில்லாதது)போன்று, ஆத்ம புத்தி யில்லே. (உபகார புத்தி பலத்தினுல் உத் சாகப் பிரவிருத்திப் பார்க்கப்படுதலினுல்) அந்நியர் கள் தமது அஞ்ஞானத்தினுல் இந்த வித்துவானுக்கு ஜீவத் தன்மையினேக் கற்பிப்பார்களாயின், (பிறராற்) கற்பிக்கப்பட்டது இருக்குக. அதனுல், இந்த வித்துவா னுக்கு ஸ்வ ரூபத்தில் ஹாநி என்? (ஒன்றும் இல்லே யென்பது கருத்தாம்).

19. தத்துவ ஞானிக்கு, அகிதம் செய்தற் பொருட்டு எல்லாத் தேவாசுரர்களும் முயற்சி யுடையோ ராயினும் சமர்த் தின்றியவ ராகின்றனர். எதனால் தன தநிஷ்டத்தினை எவன் செய்வான்? (ஒருவனும் செய்யான்). இந்தப் பலத்தோடு கூடிய ஆத்ம ஞான யத்ந வானே, தேவாசுரர்கட்கும், ஜகத்திற்கும் ஆத்மஸ்வ ரூபமா யிருக்கின்றான்.

20. ராகம், லோபம், பிரமாதம் முதலிய தோஷம் நாச மாயினமையின், ஒரு காலத்தும் நிஷித்தக் கிரியையில் இவ் வித்துவான் பிரவிர்த்திக்க மாட்டான். சத்ஜநர்களுடைய ஸ்வதர்ம அநுஷ்டாந ரூப சரீரத் திரத்தினைப் பாலிக்கும் யத்ந முடையோனாய்ச், சாது போன்று சர்வப் பிராணிகளுக்கும் உபகார மார்க்கத்தினால், அநேக ஜந்மங்களின் சுத்த சம்ஸ்காரத்தின் பலத்தினால் பிரவர்த்திக்கின்றான்.

21. ஞானி, அதிசயமான அநேக பிரியத்தினை அடைந்து சந்தோஷிப்பது மில்லை. மிகுந்த துக்கங்களிலும் மஹா மேரு போன்று நிச்சலனே யாவன். ஆத்மாவை(ச் சதா)ப் பாவித்து ஆத்மாவானே ஆநந்த முடையோனாய்த் தேவர் போன்று பிருதிவியிற் சஞ்சரிக்கின்றான்.

22. (வசிஷ்டர் முதலிய) சிலர் வர்ணாசிரம ஆசாரத்தின்கண்ணே தத்பர ராயினர்; (ஜடபாதர் முதலிய) சிலர் அஞ்ஞ பால பிரமத்தர்கட்குச் சமமான ஆசார முடையோ ராயினர்; (சௌபரி முதலிய) சிலர் ராகிகளாய்ப் போக தத்பர ராயினர்; (ஜைகீஷவ்யர் முதலிய) சிலர் சமாதியி லிருப்போ ராயினர். (ஆக



லின்) ஞானிகளின் ஆசாரம் ஒரு ரூபமாகப் பார்க்கப் படவில்லை.

23. சகஜமான தம தாநந்தத்தில் சதா சஞ்சரிப்பவர்களாயும், தம திச்சையினால் லீலை செய்பவர்களாயும் உள்ள ஞானிகளின், அறியக்கூடாத மார்க்கத்தில், ஜலத்தில் மீன்கட்கும், ஆகாயத்திற் பக்ஷிகட்கும் திக்கின் முகத்தில் வாயுக்கட்கும் (கதி)போன்று, சங்கமின்றியும், பிரதிபந்த மின்றியும், ஜநங்கட்குக் கல்யாணத்தினைச் செய்வதாயுஞ் செல்லுதல் அநேக விதமாய்க், கூடமாய், விசித்திரமா யிருக்கின்றது.

24. யோகிகளால் தியானிக்கத் தக்க பாத தாமரை எவனுக் கிருக்கின்றதோ, அவன் மூன்று லோகத்திற்கும் நாதனாகிய ஹரியாவன். இந்தச் சம்சாரத்தில் அவனைப் பார்க்கிலும் தந்நியன் ஒருவனு மில்லை. எவன் "ஸ்வயம் சாந்தனுப ஞானியைப் பின்பற்றிச் சதா நான் அடைவேன், அவரது பாதரேணுக்களால் பவித்திர மடைவேன்" என்று கூறப்படுகின்றனனோ அவன், ஜகத் குருவாகலின், தேவாசுர மனிதர்களால் நமஸ்காரஞ் செய்யப்படும் பாத தாமரையுடைமையினான், ஆத்மாநந்தத்திற் பிரவேசித்த நிச்சல புத்தி யுடைமையினான் (என்க).

25. அவ் இவ் வித்துவான், பூர்ண மநோரதனாயினும், ஸ்வாபாவிகமான குதூகலத்தினால் பிருதிவி எங்குஞ் சென்று, எல்லோரது இதத்தில் தத்பரனாய், ஒவ்வொரு பதத்திலும் ஸ்வரூபாநந்தத்தினை அநுபவிப்பவனாய், மோக சமுத்திரத்தின் கரையினை அடைந்து, "அறிய முடியாதது என்னால் அறியப்பட்டது."

என்னும் ஆச்சரியத்தோடும் "எவ்வாற்றானும் என்னால் அநுபவிக்கப்படுகின்றது" என்னும் குதூகலத்தோடும், "ஏனையரும் என் போன்று எவ்வாறுவார்கள்" என்னும் கிருபையோடும், "கிருதார்த்தனுயிருக்கின்றேன்" என்னும் ஆநந்தத்தோடும் கூடி, மீண்டும் மீண்டும் தன தாநந்த லாபத்தினை வெளிப்படுத்தும் மிகுந்த இச்சையினால் கூறுகின்றான்.

26. சகஜ சங்கடமாகிய ஜன்ம சமுத்திரத்தில் கீழ்ப்போன அநேக காலமாக மூழ்கி யிருக்கும் என்னால், புண்ணியப் பிரபாவத்தினால் குரு ரூப அமிர்த சிந்தாமணி அடையப்பட்டது. எந்தக் குருமணியின் ஸ்வச்சப் பிரியமாகிய வாக்குரூபப் பிரபைகளால் திமிரம் நீங்குமிடமாகிய ஆத்மாவால் வியாபிக்கப்பட்ட பரமாநந்த ஜ்யோதி ரூப வீட்டில் எக்காரணத்தினால் நான் ரமிக்கின்றேன். (இஃது) ஆச்சரியமாம்.

27. (ஞாநத்திற்கு) முன் மாயையினால் மறைக்கப்பட்ட திருஷ்டி யுடையவனும், சகஜமாகச் சுயமாக விளங்கும் தனதாநந்தத்தினை அறிந்தும் (இதுதான் சிதாத்மா வென) எங்ஙனம் அறிய வில்லை, அங்ஙனமே ஞாநத்தின் பின் ஞாந ரூப மையினால் நிர்மல திருஷ்டி யுடையவனும், பொய்யான இந்தச் செகத்தைச் சிதாகாசத்தில் அறிந்தும் (சத்தியத் தன்மையினால்) அறிவதில்லை.

28. ஸ்வபாவமாகப் பரமப் பிரியமாய், சுக மூர்த்தியாய், வேத்திய மின்றியதாய், அவேத்திய மின்றியதாய், வாக்கினாற் கூறக் கூடாததாய், நிஷேதிக்க முடியாததாய், எவ்வாற்றானும் நிரோதம் செய்ய முடியாததாய், க்ஷண மாத்திரமும் மறைக்க முடியாததாய், தள்ள முடியாததாய்க் கொள்ள முடியாததாய் உள்ள நமது ஆத்மா (அகண்டாகார விருத்தியினால்) சாக்ஷாத்காரமாய் அநாயாசமாய்ச் சீக்கிரம் இந்த ஜகத்தினைத் திரோதாநஞ் செய்கின்றது.



29. பிரகாச சித் ரூபமாய், ஸ்வாதீநமாய், சமாந மின்றிய ஆத்மாநந்த சமுத்திரமாய என்னிடத்தில் மநம் லயமடையுமாயின், இவ் வெல்லாச் செகத்தையும் அறியமாட்டேன். (சூரியாதி போன்று) அஸ்தமிக்கின்றதா? (கடாதி போன்று) த்வம்சமா? (அல்லது) மர்த்தநமா? (அக்நி சம்யோகத்தினால் நெய் போன்று) லயமா? (அநேக காலம் விரிந்திருந்து பிருதிவியின் மூல வாயுவினால் பீடிக்கப்பட்ட சத பத்திரம் போன்று) விசீரணமா? (சர்ப்பத்தின் முகத்தில் தவளையின் சரீரம் போன்று) ஆகீரணமா? (அல்லது சீக்கிரம் அளவாகப் புஜித்த அந்நம் போன்று) ஜீரணமா? (எல்லாவிடத்திலும் ஒருவாற்றால் வேறு சத்தை காணப்படுகின்றது. ஜகத்திற்கோ சத்தை யில்லை யென்பது தாத்பரியமாம்). (சதபத்திரம்-தாமரை; விசீரணம்-சுருங்குதல்).

30. சுத்த சேதநமாய், சங்க மின்றியதாய், செய்யப்படாத ஸ்வரூபமாய் உள்ள பிரத்தியக் பிரஹ்மத்தின்கண், இந்தச் செகத்து, எங்ஙனம் உண்டாயிற்று, எங்ஙனம் இருக்கின்றது, பின் எவ்வாறு லயமடைகின்றது என்று நன்கு விசாரித்து, ஜெகத்துப் பொய் என்று நிச்சயஞ் செய்து சுகியா யிருக்கின்றேன்.

31. ஆதார ரூப தேக மின்றியதாய், அவயவ சிருஷ்டி யின்றியதாய், அசலமாய், இச்சை யின்றியதாய், அத்

வயமாய், சமாந ரகிதமான ஆநந்த ரூப ஐஸ்வரியமுடையதாய், மாயா சம்பந்த மின்றியதாய் உள்ள அந்தப் பரப் பிரஹ்மம், பாஹ்ய சாதநமும், அந்தரங்கமான சக்ஷு முதலிய கரண சமுதாயமும் இன்றி மூன்று லோகமாகிய வீட்டினை எங்ஙனம் சிருஷ்டிக்கின்றது? (ஒருவாற்றானும் பொருந்தாது என்பதாம்).

32. தேகாதிகள், அல்லது, வேலைக்காரர்கள் இல்லை, புத்தி முதலியன, அல்லது, மந்திரிகள் இல்லை, நிர்சயமாகச் சப்தம் முதலியன, அல்லது, பிரதேசமாகிய விஷயங்கள் இல்லை, இந்திரியங்கள், அல்லது, குதிரைகள் இல்லை, சத்தியமான, அல்லது, பூரணமான அந்நமயாதி கோசங்கள், அல்லது, தநம் கிருகம் முதலியன இல்லை சரீரத்திரய அத்தியாசங்கள், அல்லது, கிராம நிவேசங்கள் இல்லை, நல்ல வியாபாரங்கள், அல்லது, சிநேகிதர்கள் இல்லை; அங்ஙனமாயினும், சகாயமின்றிய, அல்லது, அத்வயமாய ஆத்மா, ஸ்வரூப பலத்தினால், அல்லது, புஜ பலத்தினால், துச்சஞ் செய்யப்பட்ட, அல்லது, திரஸ்காரஞ் செய்யப்பட்ட, காமாதி சேனைகளை, அல்லது சத்துரு சேனைகளைச் செயித்து, இந்தச் சகல ஜகத்தினையும் ரக்ஷிக்கின்றது. இஃதாச் சரியமாம்.

33. அசங்கமாய், உதாசீநமாய், சகஜமாக மிகுந்த ஆநந்தத்திற் றிருப்தமாய், போசந இச்சை யின்றியதாய், சித் சரீரமாய், கால் கை வயிறு இன்றியதாய், மாயை யின்றியதாய், ஸ்வரூபமாகச் சித்தி (துவா)ர மின்றியதாய் இருப்பினும் இவ் வாத்மா, மாயையோடு கூடிய மூன்று லோகத்தினை எக் காரணத்தினால் எவ்வாறு விழுங்குகிறது? இஃ தாச்சரியமாம்.



34. மூடர்களால் அடிக்கடி சத்தியத் தன்மையினால் ஆரோபிக்கப்பட்ட பதார்த்த சமூகமாகிய ஜகத்தினை அந்தியந்தந் தள்ளுகின்றேன். விசுவசிக்கத்தக்கது ஒன்றும் எனக் கில்லை; யமனது தண்டத்தினாலும் எனக்குப் பய மில்லை. குணத்தைத் துவேஷிக்கின்றேன்; (நிர்க்குண மாகலின்). ஆத்மார்த்தத்தில் பிரியம் வைக்கின்றேன். கூறிய ஜகத்தின் சர்வ சொத்துக்களையும் கைக்கொள்ளும் பரமான எனது சித்திர சரித்திரத்தினை ஒரு காலும் ஒருவரும் அறிதல் முடியாது.

35. எனக்குப் பிதா இல்லை, மாதா இல்லை, இதத்தினைச் செய்யும் பந்து வில்லை, மந சரீர கிருகங்கள் இல்லை, (நீணாள் ஜீவிக்கக் காரணமான) தந மில்லை, அந்நம் இல்லை, ஜல மில்லை, சதா பாலிப்பவர்க ளில்லை, வஸ்திர மில்லை, எங்கும் சஞ்சரிக்கும் என்னை மூட ஜநங்களும் விரும்புவ தில்லை. ஹா ஹா! எனக்கு இவ்வாறாகத் துர்க்கதி யிருப்பினும் சமாந மின்றிய சுகாதிக்கிய மிருக்கின்றது. இஃது ஆச்சரியமாம்.

36. எது ஜகத்து ரூபமோ, அது வாஸ்தவமாகச் செகத்து ரூப மன்றாம். எது எல்லாவற்றிற்கும் வெளியும் உள்ளுமோ, அது வாஸ்தவமாக உள்ளும் வெளியு மன்றாம். எது சமுசார சமுத்திரத்திற்குக் கரையோ, அது வாஸ்தவமாகக் கரை அன்றாம். அஹங்கார மின்மையினால் அஹம் பத அவாச்சியமாய் நான் இருக்கின்றேன் என்று பாவித்துத் தன்னானே ஆச்சரிய முடையோ னாகின்றான்.

37. எனக்கு எந்த லோகமும் சத்தியமாகவில்லை. மீண்டும் கமல ரூப இருதயமும், கிருகமும் இல்லை,

ராகாதி மலினமும் இல்லை, என்னிடத்தில் விதி சப்தம் சமர்த்துடையதாவ தில்லை, தத்வமசியாதி வாக்கியங்களோடு சம்பந்தமு மில்லை, சங்கட சமுசாரத்தில் துக்கித் தன்மையுமில்லை; அங்ஙனமாயினும், "நான் பிரஹ்மா" (எதனால் இவன் பிரஹ்மா இவன் இந்திரன் என்பதாதி) வேத சமூகம் அந்தப் பிரஹ்மத் தன்மையினைக் கூறுகின்றன.

38. (சுத்த சித்ரூப) நான் மாயை யன்று, பாம்புரூப அந்தக்கரணத்தில் இருப்ப தில்லை, சம்சார ரூப சக்கரம் தரிப்பவனு மல்லன், சாக்கிரம் முதலிய பத்தவஸ்தைகளில் அவதரிக்கும் ஸ்வபாவ முடையோனல்லன், எனக்குச் சம்சாரத்தினை ஸ்தாபிக்குந் தன்மை யில்லை; அங்ஙனமாயினும், பிரசித்த சர்வ ஜகதீஶ்வரனாகிய நான் விஷ்ணுவா யிருக்கின்றேன்.

39. (எனக்கு) அண்டஜ, ஸ்வேதஜ, உத்பிஜ்ஜ, ஜராயுஜ, ஆப்ய, தைஜஜ, வாயவீய, மாநச ரூப எட்டுச் சரீரங்கள் இல்லை, பேத திருஷ்டியும் இல்லை, ஜந்ம சம்பந்தம் இல்லை, தர்மத்தினால் அந்த அந்த லோகத்திற் செல்ல லில்லை, ஜீவர்களாலும் சங்கமில்லை, இச்சையினை அழிப்பவனும் இல்லை; அங்ஙனமாயினும், சாக்ஷாத் பரமசிவன் நானா யிருக்கின்றேன்.

40. ஜாக்கிர ஸ்வப்ந சுழுத்தியாகிய வநத்தில் சஞ்சரித்தும் அசங்கமாயும், பாரமார்த்திக சத்தையின் சாமர்த்தியத்தினால், வெளிமுகமாக ஓடும் இந்திரியங்களாகிய புலிகளினால் பார்க்க முடியாததாயும், சிரவணமாகிய லீலையினால் உண்டான அகண்டாகார விருத்தியினால் நாசஞ் செய்யப்பட்ட மூலாஞ்ஞாநரூப மதங்கொண்ட யானைக் கூட்டங்களை உடைத்தாயும் இருக்







கும் நமது நிஜப் பிரத்தியக் காத்மரூப பிரஹ்மமானது முக்காலத்திலும் பாதிக்கக் கூடாத பதத்தில் விளங்குகின்றது.

41. ஞாநிகள், லோக அஞ்ஞாநத்தினை நாசஞ் செய்வதாயும், சத்திய அர்த்தத்தினை யுடையதாயும், சிரவண சுகத்தினைக் கொடுப்பதாயும், அமிருதம் போன்று அறிவிக்கின்றதாயும், முற்கூறியுள்ள வாக்கியங்களால், புண்ணியவான்களாய் நமஸ்கரித்த சிஷ்யர்களை, ஒவ்வொரு பதத்திலும் ஆநந்தஞ் செய்துகொண்டு பத்துத் திக்குகளையும், சூரியன் போன்று பவித்திரஞ் செய்கின்றனர்.

42. கர்ம சமூகங்களை விட்டு, சுருதி சார சுகரூபமாய், அபயமாயுள்ள ஆத்மாவில் சித்தத்தை ஸ்தாபித்து எவன் ஆநந்த முடையோ னாகின்றனனோ, அவனே தந்நியன், உத்தம கிருதார்த்தன், எல்லோராலும் பூஜிக்கத் தகுதியுடையோன். இவனது குலம் தந்நியங்கள் யாவினும் தந்நியமாம்.

43. கிருபாப் பிரவாகத்தில் விழுந்தவர்களைக் கரையேற்றுபவராய், மநோரதம் யாவும் சித்தித்தவராய், கூறியவாறு அநேக காலம் சஞ்சரித்து, எல்லாப் பிராரப்தங்களும் நசிக்குமிடத்தில்; சர்வ துக்க நிவர்த்தராய், தேக மின்றியவராய், ஸ்வப்பிரகாச ஆநந்த சமுத்திரமாக இருக்கின்றார்.

44. உத்பத்தியாவது மில்லை, லய மடைவது மில்லை, விருத்தி யடைவது மில்லை, நாச மடைவது மில்லை, தனது விளக்கத்தானே பிரகாசிக்கின்றான். ஸ்வாபாவிக ஆநந்தாமிருதத்தினால் சதா பூரணன்,

துவைத சம்பந்த மற்றவன், கூற முடியாதவன், தனது ஆத்மரூப சந்திரன் ஆக விளங்குகின்றான்.

45. சகல ஆநந்த ரூப பநிக்கட்டிக் கூட்டங்கட்குச் சமுத்திரமாயும், சகல ஞாந ரூப அக்நிப் பொறிக் கூட்டங்கட்கு மூலாக்நியாயும், பஞ்சகோசத் துவாரத்திலும் ஹிருதயத்திலும் மறைந்திருக்குங் கூடமாயும், துவைதப் பிராந்தியினை நிவர்த்திக்கும் கட்க லதையாயும், அஞ்ஞாந அவிவேக ரூப அந்தகாரத்திற்குச் சூரியனாயும், எங்கும் விளங்கிக்கொண்டு உபநிஷத் முடியில் விளங்கு மணியாகிய சித் ரூபப் பிரத்தியக் காத்மா எங்கும் விளங்குகின்றது.

46. சாந்தி, தாந்தி முதலிய திவ்விய மணிகளால் அலங்கரிக்கப்பட்டுச் சோபிப்பவர்களாய், வேதாந்த சமுத்திர அமிருத ரச ரூப ஆத்மாவில் அத்தியந்தம் விருப்புடையவர்களாய், (சிரவணத்தின் பொருட்டு) மோக்ஷ ரூப கற்ப விருக்ஷ மூலமாகிய பிரஹ்ம ஞாநியாகிய குருவின் திருவடியினை அடைந்தவர்களாய் உள்ள பண்டிதர்கட்குச் சந்தோஷத்தின் பொருட்டு இந்தச் சுவா ராஜ்ய சித்தி யிருக்குக.

47. புத்தியினைப் பிரேரிப்பிக்கும் உமா மஹேஸ்வரர்களின் பிரீதி உண்டாதற்கு (அவர்கள்) பாதங்களாகிய தாமரைகளிடத்தில் வாக்கிய ரூப புஷ்பங்களின் நமஸ்கார ரூப ஸ்வா ராஜ்ய சித்தி பக்தியினால் அர்ப்பணஞ்செய்யப்பட்டது.

மூன்றாவது பிரகரணம் முற்றிற்று.

ஸ்வா ராஜ்ய சித்தி முற்றுப் பெற்றது.

திருப் பூவண மடாதிபதி,

காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்,

இயற்றியன, பதிப்பித்தன.

| | | ரூ. அ |
|---|---|---|
| 1. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா—வசநம் | 2—8 |
| 2. | விசார சாகரம்—வசநம் | 2—0 |
| 3. | ஞாந வாசிட்டம்—கவி (2055) | 2—0 |
| 4. | கீதாத் திரயம்—கவி (1430) பாக்கேட் சைஸ் | 1—0 |
| 5. | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி—கவி (1135) | 1—0 |
| 6. | வீர சேகர ஞாந தேசிக சரிதம்—வசநம் | 1—0 |
| 7. | ஹரி மீடே— ஹரி தத்வ முக்தாவலி—வசநம் | 0-12 |
| 8. | நைஷ்க்கர்ம்ய சித்தி—வசநம் | 0—8 |
| 9. | வியாச தாத்பர்ய நிர்ணயம்—வசநம் | 0—8 |
| 10. | வேதாந்த சித்தாந்த முக்தாவலி—வசநம் | 0—8 |
| 11. | வைராக்ய தீபம்-பத வுரையும், பொழிப் புரையும் | 0—8 |
| 12. | வேதாந்த பரிபாஷை—வசநம் | 0—7 |
| 13. | ஸ்வா ராஜ்ய சித்தி—வசநம் | 0—4 |
| 14. | சீடாசாரம்—பால போதிநி—உரை | 0—4 |
| 15. | ஈசாவாஸ்யோபநிஷத்—சங்கர பாஷ்யம் | 0—4 |
| 16. | மண்டலப் பிராஹ்மணோபநிஷத்—ராஜ யோக [பாஷ்யம் | 0—4 |
| 17. | கைவல்ய நவநீதம் கவி (288) | 0—3 |
| 18. | பக்தி (வைராக்ய) சதகம்—தோத்திரப் பிரகாச [உரை | 0—3 |
| 19. | வேதாந்த சஞ்ஞா—வசநம் | 0—2 |
| 20. | பகவற் கீதை கவி (545) பாக்கேட் சைஸ் | 0—6 |
| 21. | பிரஹ்ம கீதை கவி (547) பாக்கேட் சைஸ் | 0—6 |
| 22. | ஈசுவர கீதை கவி (338) பாக்கேட் சைஸ் | 0—4 |
| 23. | சிவ சங்கராவதாரம் | 0—2 |